௨.

𑌸𑌰𑍍𑌵𑍇 𑌤𑍇 𑌰𑌾𑌜𑍇𑌨𑍍𑌦𑍍𑌰 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌂 𑌪𑌰𑍀𑌪𑍍𑌸𑍍𑌯𑌾𑌸𑌤𑍇 ।
𑌯𑍇𑌨𑌾𑌵𑌿𑌷𑍍𑌟𑍋 𑌨𑌰𑌃 𑌪𑌾𑌪𑌂 𑌮𑍂𑌢𑌸𑌂𑌜𑍍𑌞𑍋 𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌯𑌤𑌿 ॥

௩.

𑌸𑍍𑌪𑍃𑌹𑌯𑌾𑌲𑍁𑌰𑍁𑌗𑍍𑌰𑌃 𑌪𑌰𑍁𑌷𑍋 𑌵𑌾 𑌵𑌦𑌾𑌨𑍍𑌯𑌃
𑌕𑍍𑌰𑍋𑌧𑌂 𑌬𑌿𑌭𑍍𑌰𑌨𑍍𑌮𑌨𑌸𑌾 𑌵𑍈 𑌵𑌿𑌕𑌤𑍍𑌥𑍀 ।
𑌨𑍃𑌶𑌂𑌸𑌧𑌰𑍍𑌮𑌾𑌃 𑌷𑌡𑌿𑌮𑍇 𑌜𑌨𑌾 𑌵𑍈
𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌾𑌪𑍍𑌯𑌰𑍍𑌥𑌂 𑌨𑍋𑌤 𑌸𑌭𑌾𑌜𑌯𑌨𑍍𑌤𑍇 ॥

௪.

𑌸𑌂𑌭𑍋𑌗𑌸𑌂𑌵𑌿𑌦𑍍𑌵𑌿𑌷𑌮𑍋𑌽𑌤𑌿𑌮𑌾𑌨𑍀
𑌦𑌤𑍍𑌤𑍍𑌵𑌾 𑌵𑌿𑌕𑌤𑍍𑌥𑍀 𑌕𑍃𑌪𑌣𑍋 𑌦𑍁𑌰𑍍𑌬𑌲𑍀𑌯𑌾𑌨𑍍 ।

---

௨.

அரசர்க்கு அரசனே! இவை ஒவ்வொரு மனிதனையும் சூழ்கின்றன. மனிதன் எவற்றால் புகப்பெற்று, அறிவுமயங்கிப் பாபத்தை முயலுகின்றானோ, (அந்த இக் குற்றங்கள் அவனை இவ்வாறு கேடுக்கின்றன).

பாபத்தை — *தீய தொழிலை.* முயலுகின்றானே - *தொடங்குகின்றானே, செய்கின்றானே. ௩ - ௭ - ஆம் சுலோகத்தைப்பார்க்க.* (௨)

௩.

ஆசைப்பநேந்தன்மையன், கடுமையானவன், வெட்டெனப் பேசுவோன், வாய்ப்பேச்சுமிக்கவன், மனத்தினுள் கோபமுடையோன், வீம்புபேசுவோன் ஆகிய இந்த ஆறு ஜனங்களும் கொடிய இயல்பினர்; பொருளைப் பெற்றும், (பிறனை) மதிக்கிறா ரில்லை.

கடுமையானவன் — *நெஞ்சில் இரக்கமில்லாதவன்.* பொருளைப் பெற்றும், (பிறனை) மதிக்கிறா ரில்லை — *எவனிடத்தினின்றும் தமக்கு ஓர் நன்மையினைப் பெற்றாரோ, அவனைக்கூட மதிக்கிறாரில்லை என்றபடி.* (௩)

௪.

ஸம்போகஎண்ணத்தினால் நெறிநீங்கியவன், மிகுந்த கர்வமுடையவன், கொடுத்தபின்னர் தற்புகழ்ச்சிசெய்பவன், கிருபணன், திண்மை

ஸம்ப்ரஶம்ஸீ வநிதாத்விட் ததைவ
ஸப்தைதே ப்ரோக்தாஃ பாபஶீலா ந்ருஶம்ஸாஃ ||

ரு.

தர்மஶ்ச ஸத்யம் ச தபோ தமஶ்ச
அமாத்ஸர்யம் ஹ்ரீஸ்திதிக்ஷாऽநஸூயா |
தாநம் ஶ்ருதம் சைவ த்ருதிஃ க்ஷமா ச
மஹாவ்ரதா த்வாதஶ ப்ராஹ்மணஸ்ய ||

சா.

யோ நைதேப்யஃ ப்ரச்யவேத் த்வாதஶேப்யஃ
ஸர்வாமபீமாம் ப்ருதிவீம் ஸ ஶிஷ்யாத் |

---

யில்லாதவன், (இந்திரியக்) கூட்டத்தைப் புகழ்பவன், மனையாளைப் பகைப்பவன் ஆகிய எழுவரும் பாவத்தன்மையரான கொடியவர் எனப் படுகிறார்.

*ங — கஅ - ஆம் சுலோகத்தையும், அதனது உரையையும் பார்க்க.* (ச)

கொள்ளவேண்டிய குணங்கள்.

ரு.

அறமும், ஸத்யமும், தவமும், அடக்கமும், மாத்ஸர்யமின்மையும், நாணமும், பொறுமையும், அஸூயையின்மையும், கொடையும், கல்வியும், தைர்யமும், மன்னிப்பும் ஆகிய பன்னிரண்டும் ப்ராஹ்மணனுக்குப் பெரிய வ்ரதங்களாம்.

*அறமாவது - தத்தம் வர்ணத்திற்கும், ஆச்ரமத்திற்கும் விதித்தவற்றைச் செய்தலும், விலக்கியவற்றைத் தவிர்தலு மாம்.* தவம் — *சாந்த்ராயணம் முதலியன.* மன்னிப்பாவது - *மதித்தாலும், அவமதித்தாலும், அடித்தாலும், வைதாலும் மனம் விகாரப்படாமை. பிறவற்றை, ங — கக - ஆம் சுலோகத்து உரையினுள் காண்க.* (ரு)

சா.

எவன் இப் பன்னிரண்டினின்றும் தவறமாட்டானோ, அவன் இப் பூமியனைத்தையும் ஆளலாம். எவன் (அவற்றுள்) மூன்றாலாயினும்,

த்ரீண்யாஹுரேகதோ வா த்வ்யேகதோ யோ
நாஸ்ய ஸ்வமஸ்தீதி ச வேதிதவ்யம் ||

எ.

தமஸ்த்யாகோ(அ)ப்ரமாதஶ்ச ஏதேஷ்வம்ருதமாஹிதம் |
ஏதானி ப்ரஹ்மமுக்யானாம் ப்ராஹ்மணானாம் மநீஷிணாம் ||

அ.

ஸத்வாஸத்வா பரீவாதோ ப்ராஹ்மணஸ்ய ந ஶஸ்யதே |
நரகப்ரதிஷ்டாஸ்தே ஸ்யு: ய ஏவம் குர்வதே ஜநா: ||

---

இரண்டாலாயினும், ஒன்ருலாயினும் செல்வமுண்டாகப்பெற்றவனோ, அவனுக்குச் செல்வ மில்லை யென்று அறியவேண்டும்.

மூன்ருலாயினும், இரண்டாலாயினும், ஒன்ருலாயினும் செல்வ முண்டாகப்பெற்றவனோ - *மூன்றையாவது, இரண்டையாவது, ஒன்றை யாவது செல்வமாகக்கொண்டவனோ. தர்மம்முதலியவற்றுள் ஒன்றை யாயினும் செல்வமாகக் கருதி அதனையே கடைப்பிடித்து வாழ்வோன் - நிலம் வீடு சோலை பணம் மனைவி மக்கள் முதலிய செல்வத்தைச் செல் வமாக நினையா ஞதலால்,* "அவனுக்கு *(அந்த நிலம் வீடு சோலை முத லிய)* செல்வ மில்லை" *என்ருர். எனவே, தர்மம்முதலிய பன்னிரண் டும் செல்வத்துள் செல்வமாம் என்றபடி.* (சு)

எ.

சாகாமையென்பது, தன் அடக்கம் துறவு தவறின்மை என்ற இவ ற்றினுள் தங்கியுளது. ப்ரஹ்மத்தையே முதன்மையாகக்கோண்ட புத்தி யுள்ள ப்ராஹ்மணர்களுக்கு இவை உள்ளன.

முதன்மையாக - *அடையவேண்டிய பொருளாக என்றபடி.* (எ)

இன்னும் தள்ளவேண்டிய குற்றங்கள்.

அ.

ப்ராஹ்மணன் மெய்யாகவேனும் பொய்யாகவேனும் (பிறர்) குற்ற த்தைக் கூறுதல் புகழப்படுகின்றதில்லை. எந்த ஜனங்கள் இவ்வாறு செய் கிருர்களோ, அவர்கட்கு நரகத்திலே இட முண்டு.

௯.

𑌮𑌦𑍋𑌽𑌷𑍍𑌟𑌾𑌦𑌶𑌦𑍋𑌷𑌃 𑌸𑌃 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌪𑍁𑌰𑌾 𑌯𑍋𑌽𑌪𑍍𑌰𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌃 ।
𑌲𑍋𑌕𑌦𑍍𑌵𑍇𑌷𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌾𑌤𑌿𑌕𑍂𑌲𑍍𑌯𑌮𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌾 𑌮𑍃𑌷𑌾𑌵𑌚𑌃 ॥

௧௦.

𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑍌 𑌪𑌾𑌰𑌤𑌂𑌤𑍍𑌰𑍍𑌯𑌂 𑌪𑌰𑌿𑌵𑌾𑌦𑍋𑌽𑌥 𑌪𑍈𑌶𑍁𑌨𑌮𑍍 ।
𑌅𑌰𑍍𑌥𑌹𑌾𑌨𑌿𑌰𑍍𑌵𑌿𑌵𑌾𑌦𑌶𑍍𑌚 𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌪𑍀𑌡𑌨𑌮𑍍 ॥

௧௧.

𑌈𑌰𑍍𑌷𑍍𑌯𑌾 𑌮𑍋𑌦𑍋𑌽𑌤𑌿𑌵𑌾𑌦𑌶𑍍𑌚 𑌸𑌂𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌶𑍋𑌽𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌿𑌤𑌾 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑍋 𑌨 𑌮𑌾𑌦𑍍𑌯𑍇𑌤 𑌸𑌦𑌾 𑌹𑍍𑌯𑍇𑌤𑌦𑍍𑌵𑌿𑌗𑌰𑍍𑌹𑌿𑌤𑌮𑍍 ॥

---

௯.

எது முன்பு அதிகமாகச் சொல்லப்படாததோ, அந்த இறுமாப்பு பதினெட்டுக் குற்றங்களை யுடையதாம் :— ௧. ஜனங்களால் பகைக்கப் படுவேது, ௨. எதிரிடை, ௩. அஸூயை, ௪. பொய்வார்த்தை,

ஜனங்களால் பகைக்கப்படுவேது – *பிறன்மனைவியை விரும்புதல் முதலியன.* எதிரிடை - *நல்லதிற்கு இடையூறு செய்தல்.* அஸூயை - *நற்குணமுடையோரிடத்துக் குற்றதை ஏற்றுதல்.* (௯)

௧௦.

௫. காமம், ௬. கோபம், ௭. பரதந்திரமாயிருத்தல், ௮. பிறர்குற்றங்கூறுதல், ௯. கோட்சொல்லல், ௧௦. பொருளிழத்தல், ௧௧. கலகஞ் செய்தல், ௧௨. மாத்ஸர்யம், ௧௩. ப்ராணிகளை ஹிம்ஸித்தல்,

பரதந்திரமாயிருத்தல் - *கள் முதலியவற்றிற்கு வசப்பட்டிருத்தல்.* பொருளிழத்தல் - *கூத்தன், கூத்தி முதலானோர்விஷயத்திலே பொருளைச் செலவழித்தல்.* 'மாத்ஸர்யத்தைப்பற்றி, ௩ – ௧௬ – ஆம் சுலோகத்து உரையைப் பார்க்க. (௧௦)

௧௧.

௧௪. ஈர்ஷ்யை, ௧௫. எக்களிப்பு, ௧௬. குறும்புப்பேச்சு, ௧௭. அறிவை இழத்தல், ௧௮. துரோகத்தன்மை (என்பன – இறுமாப்பினாலாகும் கேடுகளாம்).

எக்களிப்பு *செருக்கிற்குக் காரணமானது ; அவ்வாறே, ஸ்மிருதி கூறுகின்றது :*

கஉ, கங.

ஸ்ளஸூஜ்யெ ஜெவ ஷஜூணா வெஜிதவஜூஃ
ஷ்ஜுயெ ஸூஷஜூஜ்யெ ச வஜூயம்ஜெ ।
ஸூஹாநாஜநஃ ஸுஹிஜம் யாசஜெ யொ
உத்ராதூயாவஜூவிஜயம் வஜூ ஸூாஜ ॥
ஐஷ்டாரு வுத்ராரு விஹவாரு ஷூாம்ஷ ஜாரு
சுஹூயிஜூஷ்ஹாஹூதி ஸுஜஹாவஃ ।
தூக்ஷூஜூவஜூஃ ஸம்வஸெநெஹ காஜாஜ
ஹும்க்ஷு கஜஷூாஸிஷம் வாயஜெ ச ॥

---

"ஹூஷெடா ஜூவஜூதி"

"எக்களிப்புற்றவன் கர்வம்கொள்ளுகிறுன்"—(ஆப - தர்ம)

அறிவை இழத்தல் – 'இது கார்யம், இது அகார்யம்' எனப் பகுத்தறியும் விவேக மில்லாமை.

ஆதலால், புத்தியுள்ளவன் இறுமாந்துபோகக்கூடாது. ஏனெனில், இது (நல்லோர்களால்) எப்போழுதுமே இகழப்பட்டதாம்.

இது – இறுமாப்புடைமை. எப்போழுதுமே என்றமையால் – ஆபத்காலத்திலுங்கூட இறுமாப்பைக் கொள்ளுத லாகாது எனக் குறிப்பிக்கப்பட்டது. (கக)

ஸுஹிருத்தின் இயல்பு.

கஉ, கங.

ஸுஹிருத்தன்மையிலே ஆறு குணங்களை அறியவேண்டும்:—க. ப்ரியத்திலே மகிழ்தல், உ. அப்ரியத்திலே வருந்துதல், ங. ஒன்று தனக்கு மிக்க ஹிதமாயினும் கேட்கத்தகாததாயினும் அதனைக் கேட்பவனுக்குக் கோடுத்தல்,

அதாவது, கேட்கப்பட்டவன் தனது இஷ்டர்களையும் புத்ரர்களையும் செல்வங்களையும் தன் மனைவியையும் சுத்தமான எண்ணத்தோடு கோடுக்கக்கூடியவனு யிருத்தல், ச. தன்போருளைக் கோடுத்தவிடத்து (கைம்மாறு) விரும்பி வஸியாதிருத்தல், ரு. தன் உழைப்பை அநுபவித்தல், சு. தன்நலத்தைக் கேடுத்துக்கோள்ளல் என்க.

இச் சுலோகங்களின் சொல்லர்த்தத்தை பதவுரையில் காண்க.

ஸுஹ்ருத் என்பவன் - கைம்மாறு கருதாது உதவிபுரிவோன்; அவனது இயல்பு - ஸௌஹ்ருதம், ஸுஹ்ருத்தன்மை. ஸ்நேஹ மென்பதோ - கொள்வன கொடுப்பன முதலியவற்றா லாகும் பற்று. ஸுஹ்ருத்தன்மைக்கு முதன்மையான அழகு ஆறு. க. தன் ஸுஹ்ருத்துக்கு வேண்டியன வந்தவழி, அவன் எப்படி மகிழ்கின்றானோ அப்படித் தானும் மகிழ்தல். உ. அவனுக்கு வேண்டாதன நேர்ந்தவழி அவன் எப்படி வருந்துகின்றானோ அப்படித் தானும் வருந்துதல். ௩. யாவராலும் கேட்கத்தகாத மனைவிமுதலானோரையும் தன் ஸுஹ்ருத் கேட்டவழி, அவரையும் கொடுத்தல். இது, விசித்திரமான ஓர்வகை அதிசயப்பேச்சு; அவ்வாறு கேட்டலே ஸுஹ்ருத்துக்கு நிகழாமை யின், கொடுத்தலென்பது ஏது? ஆகவே, ஸுஹ்ருத்துக்குக் கொடுப் பதிலேயன்றிக் கொள்வதிலே நோக்க மில்லை என்பது, அவ்வதிசயப் பேச்சின் உட்கருத்து. ச. தன் ஸுஹ்ருத்துக்குத் தான் அளவிறந்த பொருளைக் கொடுத்திருந்தாலும், "நான் இவனுக்குப் பொருளை அளவி லாது கொடுத்திருக்கிறேன்" என அவனது வீட்டில் வஸியாதிருத்தல். ரு. தன் ஸுஹ்ருத் உழைத்துத் தேடும் பொருளைத் தின்றுகொண் டிராது, தானே பாடு பட்டுத் தேடிய பொருளை அநுபவித்தல். சு. ஸுஹ்ருத்தின் நன்மைக்காகத் தன் நன்மையையும் இழத்தல். இதற்கு இணங்க,

> "ஏகே ஸத்புருஷா: பரார்த்தகடகா:
> ஸ்வார்த்தம் பரித்யஜ்ய யே
> ஸாமான்யாஸ்து பரார்த்தமுத்யமப்ருத:
> ஸ்வார்த்தாவிரோதேந யே ।
> தேऽமீ மாநுஷராக்ஷஸா: பரஹிதம்
> ஸ்வார்த்தாய நிக்நந்தி யே
> யே நிக்நந்தி நிரர்த்தகம் பரஹிதம்
> தே கே ந ஜாநீமஹே ॥"

"எவர் தமது பிரயோஜனத்தை முழுதும விட்டிட்டுப் பிற ரதுபிரயோஜனத்தைச் செய்து முடிக்கிறாரோ, (அந்த) நல்ல மனிதர் சில ராம். எவர் தமது பிரயோஜனத்திற்கு விரோத மின்றிப் பிறருக்காகப் பிரயாசத்தை மேற்கொள்ளுகிறாரோ,

கச.

த்ரவ்யவாந்து குணவாநேவம் த்யாகீ பவதி ஸாத்விக꞉ ।
பஞ்ச பூதாநி பஞ்சப்யோ நிவர்தயதி தாத்ருஶ꞉ ॥

கரு.

ஏதத் ஸம்ருத்தமப்யூர்த்வம் தபோ பவதி கேவலம் ।
ஸத்த்வாத் ப்ரச்யவமாநாநாம் ஸங்கல்பேந ஸமாஹிதம் ॥

---

(அவர்) ஸாமாந்யரே யாம். எவர் தமது பிரயோஜனத்திற்காகப் பிறரது நலத்தைக் கெடுக்கின்றனரோ, அந்த இவர்கள் மனிதராக்ஷஸ ராம். எவர்கள் பிரயோஜனமில்லாது பிறரது நலத்தைக் கெடுக்கின்றார்களோ, அவர்கள் யார் [அவர்கட்குப் பெய ரென்ன] ? எமக்குத் தெரியவில்லை. " — (நீதி - எச)

எனப் பர்த்திருஹரியார் அருளிச்செய்ததையும் நோக்குக.

இனி, ஸௌஹிருதத்திற்கும் ஸ்நேஹத்திற்கும் உதாரணம் யாதோ ? எனின், வருமாறு :— கிருஷ்ணனுக்கும் அர்ஜுனனுக்கும் ஸௌஹிருதமாம் ; மற்று, இராமனுக்கும் ஸுக்ரீவனுக்கும் அல்லது விபீஷணனுக்கும் ஸ்நேஹமாம். ஆனதுபற்றியன்றோ அர்ஜுனன் ஜிஜ்ஞாஸுவான பக்தனும் என்றும், ஸுக்ரீவனும் விபீஷணனும் அர்த்தார்த்தியான பக்தராம் என்றும் பெரியோர் கூறுகின்றார்கள். வே - கீ - எ - கசு - ஆம் சுலோகத்தைப் பார்க்க. (கஉ, கங)

கச.

(எவன்) இவ்வாறு குணமுடையவனாக, பொருளுடையவனாக, கொடுப்பவனாக, நல்லதன்மையனாக இருக்கின்றானோ அப்படிப்பட்டவன் ஐந்தினின்றும் ஐந்துபூதங்களை விலக்குகிறான்.

ஐந்தினின்றும் - ஓசைமுதலான விஷயங்களினின்றும். ஐந்து பூதங்களை - செவிமுதலியவடிவமாகத் திரிந்துநிற்கும் இந்திரியங்களை.

கரு.

இது பூர்ணமாயிருந்தாலும், தைர்யத்தினின்றும் தவறியவரால் தேடப்பெற்றதாய், (ஆதலால்) வெறும் தபஸாகி மேலே செலுத்துவதாய் உளது.

கசு.

யதோ யஜ்ஞா: ப்ரவர்த்தந்தே ஸத்வேஷாவரயாநணாஃ ।
உநவ்ஸாடநஸ்ய ஹவதி வாசாடநஸ்யாடய கடுணா ॥

கஎ.

ஸஂகல்பஸிஜஂ வாசாஷடு கஸஂகல்போடயிதிஷ்டதி ।
ப்ராஹ்மணஸ்ய விஶேஷேண கிஂ வாநூஉவி ஜெஙராணா ॥

---

*இது — ஓசைமுதலிய விஷயங்களினின்றும் செவிமுதலிய இந்திரியங்களைத் திருப்புதல். தைர்யத்தினின்றும் தவறியவரால் — உறுதியான வைராக்யமின்மையால் போகங்கட்கு அடிமைப்படும் மனத்தினரால். மேலே — மேலான உலகங்கட்கு. திவ்யமான ப்ரஹ்மலோக ஸுகங்களை அநுபவிக்கவேண்டும் என்னும் அவாவினுல் இந்திரியங்களைச் செவ்வனே அடக்கிச் செய்யும் தவமானது, அந்த அழிகின்ற போகங்களை அங்கே கொடுக்கும்; ஞானத்தைப்போல இங்கேயே நித்யமான ஆநந்தத்தைத் தர வல்லதில்லை என்பது தேர்ந்த கருத்து. (கரு)*

கசு.

எதனினின்று யஜ்ஞங்கள் தலைப்படுகின்றனவோ, (அந்த) வேதத்தையே நன்கு நிச்சயமா யறிவதனுல், ஒருவனுக்கு (யஜ்ஞமானது) மனத்தா லாகின்றது : ஒருவனுக்கு வாக்கினு லாகின்றது: ஒருவனுக்கு செய்கையினு லாகின்றது.

*ஸம்ஸாரத்தினின்றும் தப்பக் கருத்துடையோர் வேதத்தை ஓதி உணர்ந்து தம்தம் அதிகாரத்திற்குத் தக்கவாறு யஜ்ஞங்களை அநுஷ்டிக்கிறார்கள். எப்படியெனில்,— சிலர் த்யாநத்தால் யஜ்ஞத்தைச் செய்கிறார்கள்; சிலர் ப்ரஹ்மயஜ்ஞம் ஜபம் முதலியவற்றால் யஜ்ஞத்தைச் செய்கிறார்கள்; சிலர் நெய் பசு புரோடாசம் முதலியவற்றால் யஜ்ஞத்தைச் செய்கிறார்கள் என்க. இதனை, வே - கீ - ச - ஆம் அத்தியாயத்தினுள் விரிவாகக் காணலாம். (கசு)*

கஎ.

ஆசையில்லாப் பொருள், ஆசைநிறைவேறப்பெற்ற மனிதனிடத்து நிற்கின்றது. இன்னும், என்னிடமிருந்து வேறொன்றையும் கேள்; (அது) ப்ராஹ்மணனுக்கு விசேஷமாக நிற்கின்றது.

கஅ.

𑌅𑌧𑍍𑌯𑌾𑌪𑌯𑍇𑌨𑍍𑌮𑌹𑌦𑍇𑌤𑌦𑍍𑌯𑌶𑌸𑍍𑌯𑌂
𑌵𑌾𑌚𑍋 𑌵𑌿𑌕𑌾𑌰𑌾𑌂 𑌕𑌵𑌯𑍋 𑌵𑌦𑌨𑍍𑌤𑌿 ।
𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌯𑍋𑌗𑍇 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌿𑌤𑌂
𑌯𑍇 𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑍁𑌰𑌮𑍃𑌤𑌾𑌸𑍍𑌤𑍇 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 ॥

ககூ.

𑌨 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌸𑍁𑌕𑍃𑌤𑍇𑌨𑍈𑌵 𑌰𑌾𑌜𑌨𑍍
𑌸𑌤𑍍𑌯𑌂 𑌜𑌯𑍇𑌜𑍍𑌜𑍁𑌹𑍁𑌯𑌾𑌦𑍍𑌵𑌾 𑌯𑌜𑍇𑌦𑍍𑌵𑌾 ।
𑌨𑍈𑌤𑍇𑌨 𑌬𑌾𑌲𑍋𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌮𑌭𑍍𑌯𑍇𑌤𑌿 𑌰𑌾𑌜𑌨𑍍
𑌰𑌤𑌿𑌂 𑌚𑌾𑌸𑍌 𑌨 𑌲𑌭𑌤𑍍𑌯𑌨𑍍𑌤𑌕𑌾𑌲𑍇 ॥

---

**ஆசையில்லாப் பொருள்** - *அறிவான ஆத்மஸ்வரூபம்.* **ஆசைநிறைவேறப்பெற்ற** – *ஸகுண ப்ரஹ்மத்தை அறிந்திருத்தலால், தன் ஆசை வீணாகாத ; தான் எண்ணியவாறு கைகூடப்பெறுகின்ற என்றபடி.* **ப்ராஹ்மணனுக்கு** - *நிர்க்குண ப்ரஹ்மத்தை நேரே கண்டறிந்தவனுக்கு தான் நினைத்தவாறு ஸித்தித்தலும் இதுபோன்ற பிறவும், ஸகுண ப்ரஹ்மத்தை அறிந்தவனிடத்தும் வெளிப்படுகின்றன. ஆயினும், அவை நிர்க்குண ப்ரஹ்மத்தை நேரே கண்டவனிடத்து அதனினும் அதிக விசேஷமாக வெளிப்படுகின்றன என்பது பொருள்.* (கள)

கஅ.

பெரிய இதனைப் படிப்பிக்கவேண்டும் ; ஏனெனில், இது ப்ரஹ்மத்தை யடைதற்கு ஹிதமாம், (மற்றைய நூலை) சொல்லின் விகாரமாக அறிஞர் கூறுகிறார்கள். இதெல்லாம் இந்த யோகத்தைச் சார்ந்துளது. எவர்கள் அதனை அறிகிறார்களோ, அவர்கள் சாகாதவ ராகிறார்கள்.

**இதனை** – *ஞானசாஸ்திரத்தை.* **படிப்பிக்கவேண்டும்** – *சிஷ்யர்கட்கு உணர்த்தவேண்டும்.* (கஅ)

ககூ.

அரசனே! புண்யச் செய்கையினால்மாத்திரம் உண்மையை வெல்ல முடியாது. (ஒருவன்) ஹோமம் செய்யலாம் ; அல்லது, யாகம் செய்யலாம். இதனால், சிறுவன் மிருத்யுவைக் கடந்திடுகிறானில்லை. அரசனே! அவன் முடிவுகாலத்திலும் ஆநந்தத்தை யடைகிறானில்லை.

உ0.

தூஷ்ணீமேக உபாஸீத சேஷ்டேத மநஸாபி ந ।
ததா ஸம்ஸ்துதிநிந்தாப்யாம் ப்ரீதிரோஷௌ விவர்ஜயேத் ॥

உக.

அத்ரைவ திஷ்டந் க்ஷத்ரிய ப்ரஹ்மாவிசதி பச்யதி ।
வேதாநாம் சாநுபூர்வ்யேண ஏதத்விதந் ப்ரவீமி தே ॥

இதி ஸ்ரீஸநத்ஸுஜாதீயே பஞ்சமோऽத்யாய: ॥

---

உண்மையை வெல்லமுடியாது — *ப்ரஹ்மத்தை யடைதல் இயலாது.* சிறுவன் — *அஜ்ஞானி.* முடிவுகாலத்திலும் ஆநந்தத்தை யடைகிறு னில்லை - *கர்மம் கழியாமையினுல், மீளவும் பிறந்து உழலுதலாகின்றது என்றவாறு.* (கக)

உ0.

ஒருவன் மௌநமாக (ப்ரஹ்மத்தை)த் தொழுதல்வேண்டும் ; மனத்தாலும் அசைத லாகாது ; அவ்வாறே, புகழ்ச்சியினுல் மகிழ்ச்சியையும், இகழ்ச்சியினுல் கோபத்தையும் நன்ருக நீக்கவேண்டும்.

*ங - சக - ஆம் சுலோகத்தைப் பார்க்க.* (உ0)

உக.

க்ஷத்திரிய ! வேதங்களை ஆராய்ந்து இதிலே நிற்பவன்தான் ப்ரஹ்மத்தைப் பார்க்கிருன், புகுகிருன். கற்றறிந்தோனே ! யான் உனக்கு இதனைச் சொல்லுகிறேன், (கடைப்பிடித்துக்கோள்).

ஸ்ரீமத் ஸநத்ஸுஜாதீயத்தில் ஐந்தாம் அத்தியாயம் முற்றும்.

இதிலே — *ஞானயோகத்திலே.* ப்ரஹ்மத்தைப் புகுகிருன் — *குடாகாசம் மஹாகாசத்தைப் புகுந்து மஹாகாச மாமாறுபோல, ப்ரஹ்ம மாகிருன் என்றபடி.* (உக)

# ஐந்தாம் அத்தியாயம்.

## பதவுரை.

க.

| | |
|---|---|
| 𑌸𑌨𑌤𑍍𑌸𑍁𑌜𑌾𑌤𑌃 | ஸநத்ஸுஜாதர் |
| 𑌉𑌵𑌾𑌚 | சொன்னார் : |
| 𑌶𑍋𑌕𑌃 | துயரமும் |
| 𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 𑌚 | கோபமும் |
| 𑌲𑍋𑌭𑌃 𑌚 | லோபமும் |
| 𑌕𑌾𑌮𑌃 | காமமும் |
| 𑌮𑌾𑌨𑌃 | தற்பெருமையும் |
| 𑌪𑌰𑌾𑌸𑍁𑌤𑌾 | சோம்புதலும் |
| 𑌈𑌰𑍍𑌷𑍍𑌯𑌾 | ஈர்ஷையையும் |
| 𑌮𑍋𑌹𑌃 | மயக்கமும் |
| 𑌵𑌿𑌧𑌿𑌤𑍍𑌸𑌾 𑌚 | தாகமுடைமையும் |
| 𑌕𑍃𑌪𑌾 | தயையின்மையும் |
| 𑌅𑌸𑍂𑌯𑌾 | அஸூயையும் |
| 𑌜𑍁𑌗𑍁𑌪𑍍𑌸𑍁𑌤𑌾 | ஜுகுப்ஸையும் (ஆகிய) |
| 𑌏𑌤𑍇 | இந்த |
| 𑌦𑍍𑌵𑌾𑌦𑌶 | பன்னிரண்டும் |
| 𑌮𑌹𑌾𑌦𑍋𑌷𑌾𑌃 | பெரிய குற்றங்களாகவும் |
| 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌪𑍍𑌰𑌾𑌣𑌨𑌾𑌶𑌨𑌾𑌃 | மனிதருடைய வாழ்க்கையைக் கெடுப்பவையாகவும் |
| (𑌸𑌂𑌧𑌿) | (இருக்கின்றன.) |

உ.

| | |
|---|---|
| ராஜேந்த்ர | அரசரில் சிறந்தோனே ! |
| ஸப்தைதே | இவை |
| ஸப்தகம் | ஒவ்வொரு |
| உத்க்ருஷ்டம் | மனிதனையும் |
| பர்யாவ்ருணதே | சூழ்கின்றன. |
| நர: | மனிதன் |
| யை: | எவற்றால் |
| ஸுவிஷ்ட: | புகப்பெற்றவனாய் |
| உபஹதஸம்ஜ்ஞ: | அறிவுமயங்கியவனாய் |
| பாபம் | தீவினையை |
| வ்யவஸ்யதி | முயலுகின்றானோ, |
| (தே) | (அவை) |
| (ஸப்த) | (இந்த) |
| (தோஷா:) | (குற்றங்களாக) |
| (ஸந்தி) | (இருக்கின்றன.) |

---

ஙு.

| | |
|---|---|
| ஸ்ப்ருஹயாலு: | ஆசைப்படுந்தன்மையன் |
| உக்ர: | கடுமையானவன் |
| பருஷ: வா | வெட்டெனப் பேசுவோன் |
| வாசால: | வாய்ப்பேச்சுமிக்கவன் |
| மநஸா | மனத்தினால் |
| க்ரோதம் | கோபத்தை |
| பிப்ரத் வை | உடையவன் |
| விகத்தீ | வீம்புபேசுவோன் (ஆகிய) |
| ஏதே | இந்த |
| ஷட் | ஆறு |
| ஜநா: வை | மநுஷ்யர்களும் |

| | |
|---|---|
| 𑌨𑍃𑌶𑌂𑌸𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌃 | கொடியஇயல்பினராக |
| (𑌉𑌚𑍍𑌯𑌨𑍍𑌤𑍇) | (கூறப்படுகிறார்கள்.) |
| (𑌤𑍇) | (அவர்கள்) |
| 𑌅𑌰𑍍𑌥𑌂 | பொருளை |
| 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌅𑌪𑌿 | அடைந்தும் |
| (𑌪𑌰𑌂) 𑌉𑌤 | (பிறனை) |
| 𑌨 𑌸𑌮𑍍𑌮𑌾𑌨𑌯𑌨𑍍𑌤𑍇 | மதிக்கிறா ரில்லை. |

---

௪.

| | |
|---|---|
| 𑌸𑌂𑌭𑍋𑌗𑌸𑌂𑌵𑌿𑌦𑍍𑌵𑌿𑌷𑌮𑌃 | ஸம்போகஎண்ணத்தினால் நெறிநீங்கியவன் |
| 𑌅𑌤𑌿𑌮𑌾𑌨𑍀 | அதிக செருக்குடையவன் |
| 𑌦𑌤𑍍𑌤𑍍𑌵𑌾 | கொடுத்த பின்பு |
| 𑌵𑌿𑌕𑌤𑍍𑌥𑍀 | தற்புகழ்ச்சி செய்வோன் |
| 𑌕𑍃𑌪𑌣𑌃 | கிருபணன் |
| 𑌅𑌬𑌲𑍀𑌯𑌾𑌨𑍍 | திண்மையில்லாதவன் |
| 𑌬𑌹𑍁𑌪𑍍𑌰𑌶𑌂𑌸𑍀 | (இந்திரியக்)கூட்டத்தைப் புகழ்பவன் |
| 𑌵𑌨𑌿𑌤𑌾𑌦𑍍𑌵𑌿𑌟𑍍 𑌤𑌥𑌾 𑌏𑌤𑍇 | மனைவியைப் பகைப்பவன் (ஆகிய) |
| 𑌸𑌪𑍍𑌤 𑌏𑌤𑍇 | எழுவரும் |
| 𑌪𑌾𑌪𑌶𑍀𑌲𑌾𑌃 | பாவத்தன்மையராகவும் |
| 𑌨𑍃𑌶𑌂𑌸𑌾𑌃 | கொடியவராகவும் |
| 𑌉𑌕𑍍𑌤𑌾𑌃 | கூறப்பட்டிருக்கிறார்கள். |

---

௫.

| | |
|---|---|
| 𑌧𑌰𑍍𑌮𑌃 𑌚 | தர்மமும் |
| 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌚 | ஸத்யமும் |
| 𑌤𑌪𑌃 | தவமும் |
| 𑌦𑌮𑌃 𑌚 | அடக்கமும் |
| 𑌅𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌯𑌂 | மாத்ஸர்யமின்மையும் |

| | |
|---|---|
| ஹ்ரீ: | நாணமும் |
| திதிக்ஷா | பொறுமையும் |
| அநஸூயா | அஸூயையின்மையும் |
| தா3நம் | கொடையும் |
| ஶ்ருதம் ச ஸத்வ | கல்வியும் |
| த்4ருதி: | தைர்யமும் |
| க்ஷமா ச | மன்னிப்பும் (ஆகிய) |
| த்3வாத3ஶ | பன்னிரண்டும் |
| ப்3ராஹ்மணஸ்ய | ப்ராஹ்மணனுக்கு |
| மஹாவ்ரதா: | பெரிய வ்ரதங்களாக |
| (உச்யந்தே) | (சொல்லப்படுகின்றன.) |

---

சு.

| | |
|---|---|
| ய: | எவன் |
| ஏதேப்4ய: | இந்த |
| த்3வாத3ஶேப்4ய: | பன்னிரண்டினின்றும் |
| ந ப்ரமாத்3யேத் | தவறமாட்டானோ |
| ஸ: | அவன் |
| இமாம் | இந்த |
| ஸர்வாம் | எல்லா |
| ப்ருதி2வீம் அபி | பூமியையும் |
| ஶிஷ்யாத் | ஆளலாம். |
| ய: | எவன் |
| த்ரிபி4: | மூன்றாலாவது |
| த்3வாப்4யாம் | இரண்டாலாவது |
| ஏகத: வா | ஒன்றாலாவது |
| விஶிஷ்ட: | செல்வமுண்டாகப்பெற்றவனாக |
| (ப4வதி) | (ஆகின்றானோ) |
| தஸ்ய | அவனுக்கு |

| | |
|---|---|
| வித்தம் | செல்வம் |
| ந அஸ்தி | இல்லை |
| இதி ச | என்று |
| வேதிதவ்யம் | அறியவேண்டும். |

---

எ.

| | |
|---|---|
| அம்ருதம் | சாகாமையானது |
| தம: | அடக்கம் |
| த்யாக: | துறவு |
| அப்ரமாத: ச | தவறின்மை |
| இதி | என்ற |
| ஏதேஷு | இவற்றில் |
| திஷ்டிதம் | தங்கியுளது. |
| தாநி | இவை [ய |
| ப்ரஹ்மப்ரதாநாநாம் | ப்ரஹ்மத்தையேப்ரதாநமாகவுடை |
| மநீஷிணாம் | புத்தியுள்ள |
| ப்ராஹ்மணாநாம் | ப்ராஹ்மணர்கட்கு |
| (பவந்தி) | (உள்ளன.) |

---

அ.

| | |
|---|---|
| ப்ராஹ்மணஸ்ய | ப்ராஹ்மணன் |
| ஸத்யம் வா | மெய்யாகவாவது |
| அஸத்யம் வா | பொய்யாகவாவது |
| பரீவாத: | (பிறர்) குற்றத்தைச் சொல்லுதல் |
| ந ப்ரஶஸ்யதே | புகழப்படுகின்றதில்லை. |
| யே | எந்த |
| ஜநா: | மனிதர்கள் |
| ஏவம் | இவ்வாறு |

| | |
|---|---|
| 𑌕𑍁𑌰𑍍𑌵𑌤𑍇 | செய்கிறார்களோ |
| 𑌤𑍇 | அவர்கள் |
| 𑌨𑌰𑌕𑌪𑍍𑌰𑌤𑌿𑌷𑍍𑌠𑌾𑌃 | நரகத்திலே இட முடையவராக |
| 𑌸𑍍𑌯𑍁𑌃 | ஆவார்கள். |

---

௯.

| | |
|---|---|
| 𑌯𑌃 | எது |
| 𑌪𑍁𑌰𑌾 | முன்பு |
| 𑌅𑌕𑍀𑌰𑍍𑌤𑌿𑌤𑌃 | அதிகமாகச் சொல்லப்படாததோ |
| 𑌸𑌃 | அந்த |
| 𑌦𑌰𑍍𑌪𑌃 | இறுமாப்பு [தாக |
| 𑌅𑌷𑍍𑌟𑌾𑌦𑌶𑌦𑍋𑌷𑌃 | பதினெட்டுக் குற்றங்களை யுடைய |
| 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 | ஆகும். |
| 𑌲𑍋𑌕𑌵𑌿𑌦𑍍𑌵𑌿𑌷𑍍𑌟𑌂 | ஜனங்களால் பகைக்கப்படுவது |
| 𑌪𑍍𑌰𑌾𑌤𑌿𑌕𑍂𑌲𑍍𑌯𑌂 | எதிரிடை |
| 𑌅𑌸𑍂𑌯𑌾 | அஸூயை |
| 𑌮𑍃𑌷𑌾𑌵𑌾𑌦𑌃 | பொய்ப்பேச்சு |

---

௧௦.

| | |
|---|---|
| 𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑍌 | காமம், கோபம் |
| 𑌪𑌾𑌰𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑍍𑌯𑌂 | பரதந்திரமாயிருத்தல் |
| 𑌪𑌰𑍀𑌵𑌾𑌦𑌃 𑌚 | (பிறர்) குற்றங்கூறுதல் |
| 𑌪𑍈𑌶𑍁𑌨𑌂 | கோட்சொல்லல் |
| 𑌅𑌰𑍍𑌥𑌹𑌾𑌨𑌿𑌃 | பொருளை இழத்தல் |
| 𑌵𑌿𑌵𑌾𑌦𑌃 𑌚 | கலகம் செய்தல் |
| 𑌮𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌯𑌂 | மாத்ஸர்யம் |
| 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌪𑍀𑌡𑌨𑌂 | ப்ராணிகளை ஹிம்ஸித்தல் |

௧௧.

| | |
|---|---|
| 𑌈𑌰𑍍𑌷𑍍𑌯𑌾 | ஈர்ஷ்யை |
| 𑌮𑍋𑌦𑌃 | எக்களிப்பு |
| 𑌅𑌤𑌿𑌵𑌾𑌦𑌃 𑌚 | குறும்புவார்த்தை |
| 𑌸𑌂𑌜𑍍𑌞𑌾𑌨𑌾𑌶𑌃 | அறிவை இழத்தல் |
| 𑌅𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌿𑌤𑌾 | துரோகத்தன்மை |
| (𑌇𑌤𑌿) | (என்ற) |
| (𑌅𑌷𑍍𑌟𑌾𑌦𑌶) | (பதினெட்டும்) |
| (𑌦𑍋𑌷𑌾𑌃) | (குற்றங்கள்) |
| (𑌸𑍍𑌮𑍃𑌤𑌾𑌃) | (ஆகும்.) |
| 𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 | ஆதலால் |
| 𑌪𑍍𑌰𑌾𑌜𑍍𑌞𑌃 | புத்திமான் |
| 𑌨 𑌮𑌾𑌦𑍍𑌯𑍇𑌤 | இறுமாந்துபோதலாகாது. |
| 𑌹𑌿 | ஏனெனில் |
| 𑌏𑌤𑌤𑍍 | இது |
| 𑌸𑌦𑌾 | எப்பொழுதும் |
| 𑌵𑌿𑌗𑌰𑍍𑌹𑌿𑌤𑌂 | இகழப்பட்டது. |

௧௨, ௧௩.

| | |
|---|---|
| 𑌸𑍌𑌹𑍃𑌦𑍇 𑌵𑍈 | ஸுஹிருத்தன்மையிலே |
| 𑌷𑌡𑍍 | ஆறு |
| 𑌗𑍁𑌣𑌾𑌃 | குணங்கள் |
| 𑌵𑍇𑌦𑌿𑌤𑌵𑍍𑌯𑌾𑌃 | அறியத்தக்கன. |
| (𑌸𑍁𑌹𑍃𑌦𑌃) | (ஸுஹிருத்துக்கள்) |
| 𑌪𑍍𑌰𑌿𑌯𑍇 | பிரியத்திலே |
| 𑌹𑍃𑌷𑍍𑌯𑌂𑌤𑌿 | மகிழ்கிறார்கள். |
| 𑌅𑌪𑍍𑌰𑌿𑌯𑍇 𑌚 | பிரியமல்லாததிலும் |
| 𑌵𑍍𑌯𑌥𑌂𑌤𑍇 | வருந்துகிறார்கள். |
| (𑌯𑌤𑌃) | (எந்த) |

| | |
|---|---|
| 𑌦𑍇𑌯𑌂 | கொடுக்கவேண்டிய (பொருள்) |
| 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃 | தனக்கு |
| 𑌸𑍁𑌹𑌿𑌤𑌂 | அதிக ஹிதமாக |
| 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 | இருக்குமோ, |
| 𑌅𑌯𑌾𑌚𑍍𑌯𑌮𑍍 𑌅𑌪𑌿 | இரக்கத்தகாததாகவும் |
| 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 𑌵𑌾 | இருக்குமோ, |
| (𑌤𑌤𑍍) | (அதனை) |
| 𑌯𑌃 | எவன் |
| 𑌯𑌾𑌚𑌤𑍇 | இரக்கின்றானோ |
| (𑌤𑌸𑍍𑌮𑍈) | (அவனுக்கு) |
| (𑌤𑌤𑍍) | (அதனை) |
| (𑌸𑍁𑌹𑍃𑌤𑍍) | (ஸுஹிருத்தானவன்) |
| 𑌦𑌦𑌾𑌤𑌿 | கொடுக்கிறான். |
| | |
| 𑌶𑍁𑌭𑌭𑌾𑌵𑌃 | நல்ல எண்ணமுடையவன் |
| 𑌅𑌭𑍍𑌯𑌰𑍍𑌥𑌿𑌤𑌃 (𑌸𑌨𑍍) | இரக்கப்பட்டவ(னாய்) |
| 𑌇𑌷𑍍𑌟𑌾𑌨𑍍 | இஷ்டர்களையும் |
| 𑌪𑍁𑌤𑍍𑌰𑌾𑌨𑍍 | மக்களையும் |
| 𑌵𑌿𑌭𑌵𑌾𑌨𑍍 | செல்வங்களையும் |
| 𑌸𑍍𑌵𑌾𑌨𑍍 | தன்னுடைய |
| 𑌦𑌾𑌰𑌾𑌨𑍍 𑌚 | மனைவியையும் |
| (𑌦𑌾𑌤𑍁𑌂) | (கொடுக்க) |
| 𑌅𑌰𑍍𑌹𑌤𑌿 𑌚 | உரியவனா யிருக்கிறான். |
| 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌦𑌃 | (ஸுஹிருத்துக்குப்) பொருளைக் கொடுத்தவன் |
| 𑌇𑌹 | இங்கே |
| 𑌕𑌾𑌮𑌾𑌤𑍍 | விருப்பத்தினால் |
| 𑌨 𑌸𑌂𑌵𑌸𑍇𑌤𑍍 | வஸிக்கக்கூடாது. |
| (𑌸𑍁𑌹𑍃𑌤𑍍) | (ஸுஹிருத்தானவன்) |
| 𑌕𑌰𑍍𑌮 | தொழிலை |

| | |
|---|---|
| ஸம்புங்க்தே | அநுபவிக்கிறான் ; |
| ஸ்வார்த்தம் ச | தன் நலத்தையும் |
| ஹீயதே | கெடுத்துக்கொள்கிறான். |

---

கசு.

| | |
|---|---|
| (ய:) | (எவன்) |
| ஏவம் | இவ்வாறு |
| குணவாந் | குணமுடையவனாக |
| த்ரவ்யவாந் | பொருளுடையவனாக |
| தாதா | கொடுப்பவனாக |
| ஸாத்த்விக: | நல்ல தன்மையனாக |
| பவதி | இருக்கின்றானோ |
| தாத்ருச: | அப்படிப்பட்டவன் |
| பஞ்சப்ய: | ஐந்திநின்றும் |
| பஞ்ச | ஐந்து |
| பூதாநி | பூதங்களை |
| நிவர்த்தயதி | விலக்குகிறான். |

---

கரு.

| | |
|---|---|
| ஸத்யாத் | தைர்யத்திநின்றும் |
| ப்ரச்யவமாநாநாம் | தவறுகிறவராது |
| ஸங்கல்பேந | அவாவினால் |
| ஸமாஹிதம் | தேடப்பட்ட |
| ஏதத் | இது |
| ஸம்ருத்தமபி | பூர்ணமாயிருந்தாலும் |
| கேவலம் | வெறுமையான |
| தப: | தவமாகி |
| ஊர்த்வம் | மேலே செலுத்துவதாய் |
| பவதி | உள்ளது. |

---

கசு.

| | |
|---|---|
| யத: | எதனினின்று |
| யஜ்ஞா: | யஜ்ஞங்கள் |
| ப்ரவர்த்தந்தே | தலைப்படுகின்றனவோ |
| (தஸ்ய) | (அந்த) |
| வேதஸ்ய வா | வேதத்தையே |
| அவதாரணாத் | நன்கு நிச்சயமா யறிவதனால் |
| அந்யஸ்ய | ஒருவனுக்கு |
| (யஜ்ஞ:) | (யஜ்ஞமானது) |
| மநஸா | மனத்தினால் |
| பவதி | ஆகின்றது ; |
| அந்யஸ்ய | ஒருவனுக்கு |
| வாசா | வாக்கினால் |
| (பவதி) | (ஆகின்றது.) |
| அத | பின்பு (ஒருவனுக்கு) |
| கர்மணா | செய்கையினால் |
| (பவதி) | (ஆகின்றது.) |

---

கஎ.

| | |
|---|---|
| அஸங்க: | ஆசையில்லாப்(பொருள்) |
| ஸங்கஸித்தம் | ஆசைநிறைவேறப்பெற்ற |
| பூருஷம் | மனிதனிடத்து |
| அதிதிஷ்டதி | நிற்கின்றது. |
| கிஞ்ச | இன்னும் |
| மே | என்னுடைய |
| அந்யச்சாபி | மற்றையதையும் |
| ஶ்ருணு | கேள் : |
| (ஸ:) | (அது) |
| ப்ராஹ்மணஸ்ய | ப்ராஹ்மணனுக்கு |

| | |
|---|---|
| விஶேஷேண | விசேஷமாக |
| (திஷ்டதி) | (நிற்கின்றது). |

---

௧௮.

| | |
|---|---|
| (வித்வான்) | (அறிஞன்) |
| மஹத் | பெரிய |
| ஏதத் | இதனை |
| அத்யாபயேத் | படிப்பிக்கவேண்டும்; |
| (ஹி) | (ஏனெனில்) |
| (ஏதத்) | (இது) |
| ப்ராஹ்ம்யம் | ப்ரஹ்மத்தையடைதற்கு ஹிதமாக |
| (பவதி) | (இருக்கின்றது.) |
| (அந்யாநி) | (மற்றைய) |
| (ஶாஸ்த்ராணி) | (நூல்கள்) |
| வாச: | சொல்லினுடைய |
| விகாரா: | விகாரங்கள் |
| (இதி) | (என்று) |
| கவய: | ஞானிகள் |
| வதந்தி | கூறுகிறார்கள். |
| அஸ்மிந் | இந்த |
| யோகே | யோகத்திலே |
| இதம் | இந்த |
| ஸர்வம் | எல்லாம் |
| ப்ரதிஷ்டிதம் | தங்கியுளது. |
| யே | எவர்கள் |
| தத் | அதனை |
| விது: | அறிகிறார்களோ |
| தே | அவர்கள் |

| | |
|---|---|
| 𑌅𑌮𑍃𑌤𑌾𑌃 | சாகாதவராக |
| 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 | ஆகிறார்கள். |

௧௯.

| | |
|---|---|
| 𑌰𑌾𑌜𑌨𑍍 | அரசனே ! |
| (𑌨𑌰𑌃) | (மனிதன்) |
| 𑌸𑍁𑌕𑍃𑌤𑍇𑌨 | புண்யமான |
| 𑌕𑌰𑍍𑌮𑌣𑌾 𑌵𑍈 | கர்மத்தினாலேயே |
| 𑌸𑌤𑍍𑌯𑌂 | ஸத்யத்தை |
| 𑌨 𑌜𑌯𑍇𑌤𑍍 | ஜயிக்கமுடியாது ; |
| 𑌵𑌾 | அல்லது |
| 𑌜𑍁𑌹𑍁𑌯𑌾𑌤𑍍 | ஹோமம்செய்யலாம் ; |
| 𑌵𑌾 | அல்லது |
| 𑌯𑌜𑍇𑌤𑍍 | யஜ்ஞம்செய்யலாம். |
| 𑌬𑌾𑌲𑌃 | சிறுவன் |
| 𑌅𑌨𑍇𑌨 | இதனால் |
| 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌂 | மிருத்யுவை |
| 𑌨 𑌅𑌤𑍍𑌯𑍇𑌤𑌿 | கடந்திடுகிறானில்லை ; |
| 𑌰𑌾𑌜𑌨𑍍 | அரசனே ! |
| 𑌅𑌯𑌮𑍍 | இவன் |
| 𑌅𑌨𑍍𑌤𑌕𑌾𑌲𑍇 𑌚 | முடிவுகாலத்திலும் |
| 𑌰𑌤𑌿𑌂 | ஆநந்தத்தை |
| 𑌨 𑌵𑌿𑌨𑍍𑌦𑌤𑌿 | அடைகிறானில்லை. |

௨௦.

| | |
|---|---|
| (𑌵𑌿𑌵𑌿𑌕𑍍𑌷𑍁𑌃) | (ஸம்ஸாரத்தைத் தப்ப விரும்பியவன்) |
| 𑌏𑌕𑌃 | தனியாய் |

| | |
|---|---|
| 𑌤𑍂𑌷𑍍𑌣𑍀𑌂 | மௌநமாக |
| (𑌬𑍍𑌰𑌹𑍍𑌮) | (ப்ரஹ்மத்தை) |
| 𑌉𑌪𑌾𑌸𑍀𑌤 | தொழவேண்டும் ; |
| 𑌨𑍈𑌵𑌾𑌸𑍍𑌯 𑌮𑌨𑌸𑌿 | மனத்திலும் |
| 𑌨 𑌚𑍇𑌚𑍇𑌷𑍍𑌟𑍇𑌤 | அசையக்கூடாது ; |
| 𑌤𑌥𑌾 | அப்படியே |
| 𑌸𑌂𑌸𑍍𑌤𑍁𑌤𑌿𑌨𑌿𑌨𑍍𑌦𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 | புகழ்ச்சி இகழ்ச்சிகளால் |
| 𑌪𑍍𑌰𑍀𑌤𑌿𑌰𑍋𑌷𑍌 | பிரியத்தையும், கோபத்தையும் |
| 𑌵𑌿𑌵𑌰𑍍𑌜𑌯𑍇𑌤𑍍 | நன்றாக நீக்கவேண்டும். |

---

௨௧.

| | |
|---|---|
| 𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌿𑌯 | க்ஷத்திரிய ! |
| 𑌵𑍇𑌦𑌾𑌨𑌾𑌂 | வேதங்களை |
| 𑌆𑌨𑍁𑌪𑍂𑌰𑍍𑌵𑍍𑌯𑍇𑌣 | ஆராய்தலை முன்னிட்டு |
| 𑌅𑌤𑍍𑌰 | இதிலே |
| 𑌤𑌿𑌷𑍍𑌠𑌨𑍍 𑌸𑌃 | நிற்கிறவன்தான் |
| 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 | ப்ரஹ்மத்தை |
| 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 | காண்கிறான், |
| 𑌪𑍍𑌰𑌵𑌿𑌶𑌤𑌿 | புகுகிறான். |
| 𑌵𑌿𑌦𑍍𑌵𑌨𑍍 | கற்றறிந்தோனே ! |
| (𑌅𑌹𑌂) | (நான்) |
| 𑌏𑌤𑌤𑍍 | இதனை |
| 𑌤𑍇 | உனக்கு |
| 𑌬𑍍𑌰𑌵𑍀𑌮𑌿 | சொல்லுகிறேன். |

---

𑌶𑍍𑌰𑍀𑌃

𑌷𑌷𑍍𑌠𑍋𑌽𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 ॥

---

க.

𑌸𑌨𑌤𑍍𑌸𑍁𑌜𑌾𑌤 𑌉𑌵𑌾𑌚—

*𑌯𑌤𑍍𑌤𑌚𑍍𑌛𑍁𑌕𑍍𑌰𑌂 𑌮𑌹𑌜𑍍𑌜𑍍𑌯𑍋𑌤𑌿𑌃 𑌦𑍀𑌪𑍍𑌯𑌮𑌾𑌨𑌂 𑌮𑌹𑌦𑍍𑌯𑌶𑌃 ।*
*𑌯𑌦𑍍𑌵𑍈 𑌦𑍇𑌵𑌾 𑌉𑌪𑌾𑌸𑌤𑍇 𑌯𑌸𑍍𑌮𑌾𑌦𑌰𑍍𑌕𑍋 𑌵𑌿𑌰𑌾𑌜𑌤𑍇 ॥*

---

# ஆறும் அத்தியாயம்.

## ஆத்மஸ்வரூபமும், ஆத்மக்காட்சியும்.

*சென்ற அத்தியாயங்களுள்,*

*“நித்யமான ஜ்யோதிஸை ஞானத்தால் அடைகிறான்; அதற்கு வழி வேறுவிதமாக இல்லையன்றே”—(ச - கஅ)*

*எனவும்,*

*“அதனை ஞானயோகத்தால் காண்கிறான்”— (ச – உச)*

*எனவும்,*

*“க்ஷத்திரிய! வேதங்களை ஆராய்ந்து இ(ந்தஞானயோகத்)திலே நிற்பவன்தான் ப்ரஹ்மத்தைப் பார்க்கிறான், புகுகிறான். கற்றறிந்தோனே! யான் உனக்கு இதனைச் சொல்லுகிறேன், (கடைப்பிடித்துக்கொள்)”—(ரு – உக)*

*எனவும் கூறப்பட்டன. ஆகவே, ஆத்மஸ்வரூபத்தை விரித்துணர்த்துபவராய், அதனைக் காணுதற்கு ஞானயோகமே உற்ற கருவியாம் என்பதை வற்புறுத்தும்பொருட்டு, அது அதனையுடையோர்க்கே ப்ரத்யக்ஷமாதலை அடுத்தடுத்து ஆளுகிறார்:*

க.

ஸநத்ஸுஜாதர் சொல்லலுற்றார்:

எது பெரிய ஒளியாய் விளங்குகின்ற பெரும் புகழ்ச்சியோ; எதனை தேவர்கள் தொழுகிறார்களோ; எதனால் சூரியன் விளங்குகின்றதோ; அது சுத்தமானது.

யொமிநஷூம் ஷுவஸூஷீ ஹமவஷும் ஷநாதநழ் ||

---

அந்த என்றுமுள்ள பகவானை யோகிகள் காண்கிறார்கள்.

எல்லாவற்றையும் விளக்குவதனால், பேரிய ஒளியாம்; அப்படியே,

"தஸ்ய ஹாஸா ஸவஷிதம் விஹாதி"

"அதனது ஒளியினால் இதெல்லாம் விளங்குகின்றது"—
(கட - ங் - கரு; மு - உ - உ - கo; ச்வே - சு - கச)

எனச் சுருதி கூறுகின்றது. பெரும் புகழ்ச்சி - திக்குக்களால் அளவி டப்படாததாய் எங்கும் நிறைந்த கீர்த்தி; அவ்வண்ணமே,

"தஸ்ய நாம மஹுஷ்யஃ"

"அதற்குப் பெயர் பெரும்புகழ்ச்சி"— (மகாநா - க - கo)

எனச் சுருதியு மாம். இந்திரன்முதலான தேவர்கள் ப்ரஹ்மத்தைத் தொழுதலை,

"தஜேவா ஜெ்யாதிஷாம் ஜெ்யாதிஃ... ...உவாஸதெ ஽மூதழ்"

"தேவர்கள், ஒளிகட்கு ஒளியான அந்த சாகாப்பொருளைத் தொழுகிறார்கள்"—(ப்ரு — ச — ச — கசு)

என்பதனால் அறிக. சூரியன் பரம்பொருளின் ஒளியினால் விளங்குதலை,

"யெந ஸூயஷுவதி தெஜஸெஜஃ"

"சூரியன், எந்த ஒளியினால் கொளுத்தப்பட்டு விளங்குகின்றானோ"—(தை - ப்ரா - ந - கஉ - கூ)

என்னும் சுருதியினாலும்,

"யஷாதிதூமதம் தெஜொ ஜமஹாஸயதெ஽விலழ் |
யசூஂஜூமஸி யசூாஜ்ள தத்தெஜா விஜி மாமகழ் ||"

"எந்த ஒளி சூரியனைச் சார்ந்துநின்று, உலகையெல்லாம் பிரகாசிக்கச்செய்கின்றதோ; எது சந்திரனிடத்தும் உள்ளதோ; எது தீயினிடத்து உள்ளதோ; அந்த ஒளியை என்னுடையதாகத் தெரிந்துகொள்"—(வே - கீ - கரு—கஉ)

என்னும் ஸ்மிருதியினாலும் கண்டுகொள்க. சுத்தமானது — அஜ்ஞானம் முதலிய குற்ற மில்லாதது.

௨.

ஶுத்தாத் ப்ரஹ்ம ப்ரபவதி ப்ரஹ்ம ஶுத்தேந வர்ததே ।
தச்சுப்ரம் ஜ்யோதிஷாம் மத்யேऽதப்தம் தபதி தாபநம் ॥
யோகிநஸ்தம் ப்ரபஶ்யந்தி பகவந்தம் ஸநாதநம் ॥

---

யோகிகள் – ஞானயோகிகள். இவரே ஆத்மாவைக் காண வல்லுநராம்; பிறரில்லை. அவ்வாறே, கூறப்பட்டுளது :

> "அஸம்வேத்யம் ஹி தத் ப்ரஹ்ம குமாரீ ஸ்த்ரீஸுகம் யதா । அயோகீ நைவ ஜாநாதி ஜாத்யந்தோ ஹி யதா கடம் ॥"

> *"கந்யையாவாள் மனைவிஸுகத்தை(த் தானே அறியவேண்டுமாறு)போல, (முமுக்ஷுஎன்பான்) அந்த ப்ரஹ்மத்தைத் தானே அறியவேண்டும். பிறவிக்குருடனுக்குக் குடம் தெரியாதவாறுபோல, ஞானயோகமில்லானுக்கு (ப்ரஹ்மம் தெரியவேமாட்டாது. கந்யை - கலவியறியாதவள். மனைவிஸுகத்தை – கலவியின்பத்தை)"*　(௧)

௨.

*இனி, ப்ரஹ்மத்தினின்றே ஹிரண்யகர்ப்பனது உற்பத்தியைக் காட்டுகிறார் :*

சுத்தப்பொருளினின்று ஹிரண்யகர்ப்பன் பிறக்கிறான்; சுத்தப் பொருளினால் ஹிரண்யகர்ப்பன் வளர்கிறான். அந்த சுத்தப்பொருள், ஒளிகளுள் (யாதாயினுமொன்றனாலும் தான்) விளக்கப்படாததாய் (அவற்றை) விளக்குவதாய் விளங்குகின்றது.

யோகிகள், அந்த என்றுமுள்ள பகவானைக் காண்கிறார்கள்.

சுத்தப்பொருளினின்று – *கீழ்க்கூறிய ப்ரஹ்மத்தினின்று.* வளர்கிறான் – *விராட்வடிவாகிறான்.* ஒளிகளுள் – *சூரியன்முதலியவற்றுள்.*

*எவன் பிறவற்றால் விளக்கப்படாது யாவற்றையும் விளக்குபவனாய்த் தானே விளங்குகின்றானோ, அந்த நித்யமான பகவானை ஞானயோகிகளே பார்க்கிறார்கள்.*　(௨)

௩.

𑌪𑍂𑌰𑍍𑌣𑌾𑌤𑍍 𑌪𑍂𑌰𑍍𑌣𑌾𑌨𑍍𑌯𑍁𑌦𑍍𑌧𑌰𑌨𑍍𑌤𑌿
𑌪𑍂𑌰𑍍𑌣𑌾𑌤𑍍 𑌪𑍂𑌰𑍍𑌣𑌂 𑌪𑍍𑌰𑌚𑌕𑍍𑌷𑌤𑍇 |
𑌹𑌰𑌨𑍍𑌤𑌿 𑌪𑍂𑌰𑍍𑌣𑌾𑌤𑍍 𑌪𑍂𑌰𑍍𑌣𑌂 𑌚
𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑍇𑌵𑌾𑌵𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 ||
𑌯𑍋𑌗𑌿𑌨𑌸𑍍𑌤𑌂 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍 ||

---

௩.

இனி,

“ 𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑌦𑌃 𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑌿𑌦𑌂 𑌪𑍂𑌰𑍍𑌣𑌾𑌤𑍍𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑍁𑌦𑌚𑍍𑌯𑌤𑍇 | 𑌪𑍂𑌰𑍍𑌣𑌸𑍍𑌯 𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑌾𑌦𑌾𑌯 𑌪𑍂𑌰𑍍𑌣𑌮𑍇𑌵𑌾𑌵𑌶𑌿𑌷𑍍𑌯𑌤𑍇 || ”

“ பூர்ணம் அது ; பூர்ணம் இது. பூர்ணத்தினின்றும் பூர்ணம் கிளம்புகின்றது. பூர்ணத்தினுடைய பூர்ணத்தை எடுக்க, பூர்ணமே மிஞ்சுகின்றது”—(ப்ரு - ரு - க - க)

என்னும் சுருதியின் பொருளை உரைக்கின்றார் :

(ப்ராணிகள்) பூர்ணத்தினின்றும் பூர்ணத்தைப் பிரிக்கின்றன. பூர்ணத்தினின்றும் (பிரிக்கப்பட்டதை, ஞானிகள்) பூர்ணம் என்கிறார்கள் ; மேலும், பூர்ணத்தினின்றும் பூர்ணத்தை யடைகிறார்கள். (அங்ஙனம்) பூர்ணமே மிஞ்சுகின்றது.

இடம் காலம் காரணம் என்றவற்றால் வரைசெய்யப்படாத பரமாத்மாவினின்றும் இப் பரமாத்மாவையே உபாதிமயக்கத்தால் ஜீவனாக வேறுபடுத்திக்கொள்கிறார்கள்.—யார் ?— விவேகமில்லாத ப்ராணிகள். ஆனால், ஞானிகள் அந்த ஜீவனையும் பரமாத்மாவாகவே கூறுகிறார்கள் ; பூர்ணத்தினின்றும் எடுக்கப்பட்டமையாலே ஜீவனும் பூர்ணமேதான் என்கிறார்கள். அவ்வாறே, ஜீவவடிவான பூர்ணத்தினின்றும் பூர்ணத்தை யடைகிறார்கள், உடம்பு இந்திரியங்கள் முதலியவற்றினின்றும் அவற்றிற்கு ஸாக்ஷியான ஆத்மஸ்வரூபத்தைப் பிரித்து அதனையே நாடுகிறார்கள். நாடவே, பின்பு பூர்ணமான ஸ்வரூபமே மிஞ்சுகின்றது.

இந்த பூர்ண ஸ்வரூபமான பரமாத்மாவை ஞானயோகிகளே காண்கிறார்கள்.

(௩)

௪.

𑌆𑌪𑍋𑌽𑌥𑌾𑌦𑍍𑌭𑍍𑌯𑌃 𑌸𑌲𑌿𑌲𑌂 𑌤𑌸𑍍𑌯 𑌮𑌧𑍍𑌯𑍇
𑌉𑌭𑍌 𑌦𑍇𑌵𑍌 𑌶𑌿𑌶𑍍𑌰𑌿𑌯𑌾𑌤𑍇𑌽𑌨𑍍𑌤𑌰𑌿𑌕𑍍𑌷𑍇 ।
𑌅𑌕𑍍𑌷𑍁𑌦𑍍𑌰𑍀𑌃 𑌸𑌵𑌿𑌷𑍍𑌟𑍀𑌰𑍍𑌵𑌸𑌾𑌨𑌾
𑌉𑌭𑍇 𑌬𑌿𑌭𑌰𑍍𑌤𑌿 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌂 𑌦𑌿𑌵𑌂 𑌚 ॥

𑌯𑍋𑌗𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 [illegible] 𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍 ॥

---

௪.

இனி,

"𑌦𑍍𑌵𑌾 𑌸𑍁𑌪𑌰𑍍𑌣𑌾 𑌸𑌯𑍁𑌜𑌾 𑌸𑌖𑌾𑌯𑌾 𑌸𑌮𑌾𑌨𑌂 𑌵𑍃𑌕𑍍𑌷𑌂 𑌪𑌰𑌿𑌷𑌸𑍍𑌵𑌜𑌾𑌤𑍇 । 𑌤𑌯𑍋𑌰𑌨𑍍𑌯𑌃 𑌪𑌿𑌪𑍍𑌪𑌲𑌂 𑌸𑍍𑌵𑌾𑌦𑍍𑌵𑌤𑍍𑌤𑍍𑌯𑌨𑌶𑍍𑌨𑌨𑍍𑌨𑌨𑍍𑌯𑍋𑌽𑌭𑌿𑌚𑌾𑌕𑌶𑍀𑌤𑌿 ॥"

*"அழகிய இறகு பொருந்தி, தோழமை பூண்டு சேர்ந்து நிற்கின்ற இரண்டு (பக்ஷிகள் ஒரேமரத்தில்) தங்கியுள்ளன. அவற்றுள், ஒன்று பழத்தை ருசியாகத் தின்கின்றது ; மற்றொன்று (அதனைத்) தின்னாததாய் எங்கும் பார்த்துக்கொண்டிருக்கின்றது"—(ச்வே - ௪ - ௬)*

*என்னும் சுருதியின் பொருளை அருளிச்செய்கிறார் :*

ஜலம் (படைக்கப்பட்டது)'; பின்பு, ஜலத்தினின்று உடம்பு. அதனுள்ளேயுள்ள இடத்திலே, இரண்டு தேவர்கள் தங்கியுள்ளார்கள். இருவரும் உள்திக்குக்களோடு திக்குக்களை மூடுகிறவராய் மண்ணையும் ஒளிவடிவையும் உடையவர்கள்.

*இந்தப் பரமாத்மாவினின்றும் முதலில் நீர் படைக்கப்பட்டது ; அவ்வாறே,*

"𑌅𑌪 𑌏𑌵 𑌸𑌸𑌰𑍍𑌜𑌾𑌦𑍌"

*"முதலில் ஜலத்தையே படைத்தான்"—(மநு - ௧ - ௮)*

*என ஸ்மிருதியு மாம்.* ஜலம் *என்பது - இங்கே, ஆகாசம்முதலிய மற்றைய பூதங்கட்கும் உபலக்ஷணம். இப் பஞ்சபூதங்களினின்றும்* உடம்பு *படைக்கப்பட்டது. இவ்வுடம்பினுடைய ஹிருதயஆகாசத்தினுள்ளே ஜீவனும் பரமாத்மாவும் தங்கியுள்ளார்கள்.* தேவர்கள் - *பிரகாசிக்கும் இயல்பினர்கள்.* உள்திக்குக்களோடு திக்குக்களையும் மூடுகிறவராய் —

ஹ்ருதயஆகாசத்தினுள்மாத்திரம் தங்கியிராது, எங்கும் பரவியவராய் என்பது பொருள். மண்ணை - பூதங்களாலாகிய சரீரத்தை. ஜீவனானது ஆநந்தஅறிவான ப்ரஹ்மாத்மஉண்மையாகிய தன்இயல்பையறியாது, ஆத்மாஅல்லாத உடம்புமுதலியவற்றை ஆத்மாவாகக்கொண்டு, வினைப்பயனுக்கேற்ப இன்பதுன்பங்களை நுகரவேண்டி பூதங்களாலாகிய உடம்பொடுநிற்கின்றது. மற்றொன்றோ ப்ரகாசவடிவான ஸ்வரூபமாகவே உளது.

ஸ்வரூபமாகவேநின்று யாவற்றையும் பார்த்துக்கொண்டிருக்கின்ற பகவானை ஞானயோகிகளே பார்க்கிறார்கள். (௪)

இனி,

“ஆத்மாநம் ரதிநம் வித்தி ஶரீரம் ரதமேவ து ।
புத்திம் து ஸாரதிம் வித்தி மந: ப்ரக்ரஹமேவ ச ॥

“இந்த்ரியாணி ஹயாநாஹு: விஷயாம்ஸ்தேஷு கோசராந் । ஆத்மேந்த்ரியமநோயுக்தம் போக்தேத்யாஹுர்மநீஷிண: ॥

“விஜ்ஞாநஸாரதிர்யஸ்து மந:ப்ரக்ரஹவாந் நர: । ஸோऽத்வந: பாரமாப்நோதி தத்விஷ்ணோ: பரமம் பதம் ॥”

“உடம்பு தேராக, ஆத்மா தேருக்குஉடையவனாக அறிவை; புத்தி தேர்ப்பாகனாக, மனம் கடிவாளமாக அறிவை.

“இந்திரியங்களைக் குதிரைகளென்பர். அவை (அப்படியுள்ளவளவிலே), விஷயங்களை வழிகளென்பர். ஞானிகள், உடம்பு இந்திரியம் மனம் என்றவற்றோடுநிற்கும் (ஆத்மாவை) போக்தா [அநுபவிப்பவன், ஸம்ஸாரி] என்கிறார்கள்.

“விவேகபுத்தி தேர்ப்பாகனாக, மனம் கடிவாளமாகஉடைய மனிதன் எவனோ, அவன் (ஸம்ஸார)வழிப்பயணத்தின் முடிவையடைகிறான். அது, எங்குமுள்ளபொருளினுடைய மேலான இடம்”—(கட - ௩ - ௩, ௪, ௯)

என்னும் சுருதியின் பொருளைக் கூறுகின்றார் :

௫.

அக்ஷ்ரே ஶரீரஸ்ய திஷ்டதோ ஜந்துநாஸ்யாஸ்யைகைர்ணை: ।
க்ஷேத்ராஜ்ஞம் ஸம்ஹத்ய்வா: தம் திவ்யமஜரம் திவி ॥
யோகிநஸ்தம் ப்ரபஶ்யந்தி பகவந்தம் ஸநாதநம் ॥

௬.

ந ஸாத்ருஶ்யே திஷ்டதி ரூபமஸ்ய
ந சக்ஷுஷா பஶ்யதி கஶ்சிதேநம் ।

---

௫.

அநித்யமாய் அழியாவினையுள்ள உடம்பின் சக்கிரத்திலே நிற்கும் குதிரைகள், ஆகாசத்திலே திவ்யமான மூப்பில்லா அவனிடத்து ஜீவனைக் கொண்டுபோய்ச்சேர்க்கின்றன.

யோகிகள் அந்த என்றுமுள்ள பகவானைப் பார்க்கிறார்கள்.

அநித்யமாய் அழிவுள்ள - *தான் அழிவதாயினும், தன்னால் செய்யப்பட்ட வினையெல்லாம் அழியப்பெறாத.* சக்கிரத்திலே நிற்கும் குதிரைகள் - *சக்கிரம்போல் சுழிக்கின்ற கர்மம் காரணமாகச் செல்லும் இந்திரியங்கள்.* ஆகாசத்திலே - *ஹிருதயஆகாசத்திலே.* திவ்யமான = *அலௌகிகமான; பசி தாகம் முதலியவற்றைக் கடந்துநிற்கின்ற என்றபடி.* மூப்பில்லா - *மூப்பு இறப்பு முதலிய எத்தகைய விகாரமும் இல்லாத; இங்கு மூப்புஎன்பது, பிறத்தல் வளர்தல் முதலியவற்றிற்கும் உபலக்ஷணம்.* அவனிடத்து - *பரமாத்மாவினிடத்து.*

*உடம்பாகிய வண்டியிலே பூட்டப்பெற்ற இந்திரியங்கள் என்னும் குதிரைகளை வசப்படுத்திக்கொள்ளாவழி, அவை ஜீவனை ஓசைமுதலிய விஷயங்களாகிய தேசங்களிலே கொண்டுபோய்ச்சேர்க்கின்றன; வசப்படுத்திக்கொண்டவழியோ, பரமாத்மா என்னும் தேசத்திலே கொண்டுபோய்ச்சேர்க்கின்றன என்பது கருத்து.*

*அவை ஜீவனை எந்தப் பரமாத்மாவினிடத்துக் கொண்டுபோய்ச்சேர்க்கின்றனவோ, அந்த பகவானை யோகிகள் காண்கிறார்கள்.* (௫)

௬.

மேலும்,

இதனது வடிவம் ஒப்புமையிலே இல்லை. ஒருவனும் இதனைக்

உநீஷயாzயொ உநஸா ஹூஜா ச
ய ஏநம் விஓுரஜாதாஸ்தெ ஹவந்தி ॥
யொகிநஸ்ஸம் ஜூவஶ்யந்தி ஹ஗வந்தம் ஸநாதநம் ॥

---

கண்ணால் காண்கிறானில்லை. எவர் இதனை புத்தியினாலும் மனத்தினாலும் ஹிருதயத்தினாலும் அறிகிறாரோ, அவர் சாகாதவ ராகிறார்.

யோகிகள் அந்த என்றுமுள்ள பகவானைப் பார்க்கிறார்கள்.

*பரம்பொருளுக்கு ஒப்பாக வேறொன்று இல்லை. அவ்வண்ணமே, சுருதியும் கூறுகின்றது :*

*“ந தஸ்ய ஜூதிமாsஸ்தி ”*

*“அதற்கு நிக ரில்லை”(ச்வே - ச - கக)*

“கண்ணால்”*என்பது, மற்றைய இந்திரியங்கட்கும் உபலக்ஷணம். பரமாத்மா, இந்திரியங்கட்கெல்லாம் எட்டாததாம். அப்படியே,*

*“அஶஜூமஸ்ஸஶ-மநூ-வமவ்யயம் ”*

*“ஓசையில்லது, ஸ்பர்சமில்லது, உருவமில்லது, அழிவில லது— (கட - ந - கரு)*

*என்னும் சுருதியைக் காண்க.* ஹிருதயத்தினாலும் - *ஈச்வரனாலும் (சா - அ - ந - ந); அவனது அருளினாலும் என்றபடி. ஆத்மலாபத்திற்கு அவனது அருள் ஸாதநமாயிருத்தலை,*

*“யஸ்ய தெவெ வரா ஹக்திய-ஜாயா தெவெ தயா ஞ-ரௌ । தஸ்யைதெ கயிதா ஹ்யஜாஃ ஜூகாஶநெ உஹாத்நஃ ॥ ”*

*“எவனுக்கு ஈச்வரன்மீது உயர்ந்த பக்தி உளதோ; எப்படி ஈச்வரன்மீது, அப்படி ஆசார்யன்மீது உளதோ; அந்த உயர்ந்தமனத்தினனுக்கே - உபதேசிக்கப்பட்ட பொருள்கள் விளங்குகின்றன ”(ச்வே - சு - உந)*

*என்னும் சுருதியும்,*

*“தெஷாமெவாநு-கஂவாயம் அஹஜஜ்ஞாநஜம் தஃ । நாஶயாஜ்யா-த்ஹாவஸ்ஸஃ ஜ்ஞாநதீவெந ஹாஸ்வதா ॥ ”*

எ.

த்வாதஶபூகா: ஸரிதோ தேவரக்ஷிதா மத்வீஶதே |
ததநுவிதாயிநஸ்ததா ஸஞ்சரந்தி கோரம் ||
யோகிநஸ்தம் ப்ரபஶ்யந்தி பகவந்தம் ஸநாதநம் ||

---

> "அவர்கட்கு அறியாமையினு லுண்டான இருட்டை, யான் (அவர்களது) சித்தவ்ருத்தியிலே இருந்து, ஒளிர்கின்ற ஞானவிளக்கைக்கொண்டு கருணையினுலேயே தொலைக்கின் றேன்"(வே - கீ - கO - கக)

என்னும் ஸ்மிருதியும் காட்டுகின்றன.

மனிதர்கள் எவனை அறிந்து சாகாதவ ராகிருர்களோ, அந்த பக வானை யோகிகள் காண்கிருர்கள். (சு)

எ.

இனி, இந்திரியங்கள் விஷயங்கள்மீது செல்லுதலே தீங்கை விளைக் கின்றது எனக் கூறுகிருர் :

ஈச்வரனுல் காக்கப்பட்டவையாய் ஓடுந்தன்மையுள்ள பன்னி ரண்டு கூட்டங்கள் தேனை ஒழுங்குபடுத்துகின்றன. அங்ஙனம் அத னைப் பின்பற்றுகிறவர்கள் பயங்கரமான(ஸம்ஸாரத்தில்) திரிகிருர்கள்.

யோகிகள் அந்த என்றுமுள்ள பகவானைப் பார்க்கிருர்கள்.

கர்மேந்திரியங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து, மனம் ஒன்று, புத்தி ஒன்று; ஆகப் பன்னிரண்டு, அனேக புருஷர்களை நோக்கி, அவை ஒவ்வொன்றும் கூட்டமாதல் கூறப்பட்டது. தேனை - தேன் போன்றதை, விஷயத்தை என்றவாறு. ஒழுங்குபடுத்துகின்றன - ஈச் வரனுடைய மேல்பார்வையினுல் தம்தமக்கு அமைக்கப்பட்டிருக்கும் விஷயங்களை நுகர்கின்றன என்பது பொருள். அதனைப் பின்பற்றுகிற வர்கள் - விஷயத்திலே அழுந்துகிறவர்கள்.

இந்திரியக்கூட்டம்முதலியன எவனுல் காக்கப்பட்டவையாய்த் தேனை ஒழுங்குபடுத்துகின்றனவோ, அந்த ஈச்வரனை யோகிகளே காண் கிருர்கள். (எ)

௮.

𑌅𑌰𑍍𑌧𑌮𑌾𑌸𑌂 𑌪𑌿𑌬𑌤𑌿 𑌸𑌂𑌚𑌿𑌤𑌂 𑌭𑍍𑌰𑌮𑌰𑍋 𑌮𑌧𑍁 ।
𑌈𑌶𑌾𑌨𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 𑌹𑌵𑌿𑌰𑍍𑌭𑍂𑌤𑌮𑌕𑌲𑍍𑌪𑌯𑌤𑍍 ॥
𑌯𑍋𑌗𑌿𑌨𑌸𑍍𑌤𑌂 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍 ॥

௯.

𑌹𑌿𑌰𑌣𑍍𑌯𑌪𑌰𑍍𑌣𑌮𑌶𑍍𑌵𑌤𑍍𑌥𑌮𑌭𑌿𑌪𑌦𑍍𑌯 𑌹𑍍𑌯𑌪𑌕𑍍𑌷𑌕𑌾𑌃 ।
𑌤𑌤𑍍𑌰𑍈𑌵 𑌪𑌕𑍍𑌷𑌿𑌣𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌪𑌤𑌨𑍍𑌤𑌿 𑌯𑌥𑌾𑌸𑍁𑌖𑌮𑍍 ॥

---

௮.

*அன்றியும்,*

ப்ரமரமானது சேர்த்துவைக்கப்பட்ட அந்தத் தேனை அரைமாசம் குடிக்கின்றது. ஈச்வரன் எல்லா ப்ராணிகளிடத்தும் ஹவிஸாயுள்ளதைப் படைத்தான்.

யோகிகள் அந்த என்றுமுள்ள பகவானைக் காண்கிருர்கள்.

'ப்ரமரம்' *என்னும் சொல் - (க) 'வண்டு,' (உ) 'அலையுந்தன்மையன் [ஸம்ஸாரியானஜீவன்]' என இங்கு இருபொருள்பட்டது.* ஹவிஸாயுள்ளதை - *உணவு முதலியவற்றை, கர்மத்தின் பயனை என்றபடி.*

*எப்படி வண்டானது ஒருபாதிமாசத்தில் சேர்த்துவைத்த தேனை ஒருபாதிமாசத்தில் குடிக்கின்றதோ, அப்படி ஸம்ஸாரியானவன் முந்தின பிறவியில் தேடிவைத்த கர்மத்தின் பயனைப் பிந்தின பிறவியிலே அநுபவிக்கிருன். திருடுதலாகிய தீய செய்கையின் பயனைக் கள்ளனுக்கு அரசன் கொடுப்பதுபோல், அந்தந்தக் கர்மத்தின் பயனை ப்ராணிகட்கு ஈச்வரன் தக்கவாறு அமைக்கிருன் என்பது கருத்து.*

*அவ்வாறு அமைக்கின்ற பகவானை யோகிகள் பார்க்கிருர்கள்.* (௮)

௯.

*(சங்கை) :— ப்ராணிகள் இப்படியே எப்பொழுதும் மீளமீளப் பிறந்து இறந்து உழன்று செல்லவேண்டியவையா? அல்லது, அவை எப்பொழுதேனும் இதனினின்று நீங்குதல் கூடுமா? எனில்,—*

*(ஸமாதாநம) :— கூறுவோம் :*

இறகில்லாத அவர்கள் தங்கஇலையுள்ள அச்வத்தத்தை யடைந்து, அங்கு இறகுள்ளவராகி ஸுகப்படி பறந்திடுகிறார்கள்.

𑌯𑍋𑌗𑌿𑌨𑌸𑍍𑌤𑌂 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍 ॥

௧௦.

𑌅𑌪𑌾𑌨𑌂 𑌗𑌿𑌰𑌤𑌿 𑌪𑍍𑌰𑌾𑌣𑌃 𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 𑌗𑌿𑌰𑌤𑌿 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌾𑌃 ।
𑌆𑌦𑌿𑌤𑍍𑌯𑍋 𑌗𑌿𑌰𑌤𑍇 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌾𑌦𑌿𑌤𑍍𑌯𑌂 𑌗𑌿𑌰𑌤𑍇 𑌪𑌰𑌃 ॥
𑌯𑍋𑌗𑌿𑌨𑌸𑍍𑌤𑌂 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍 ॥

---

அந்த என்றுமுள்ள பகவானை யோகிகள் காண்கிறார்கள்.

இறகில்லாத - *ஞானமில்லாத*; இறகுள்ள - *ஞானமுள்ள*; இங்கு,

"𑌯𑍇 𑌵𑍈 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌂𑌸𑌸𑍍𑌤𑍇 𑌪𑌕𑍍𑌷𑌿𑌣𑍋 𑌯𑍇 𑌅𑌵𑌿-
𑌦𑍍𑌵𑌾𑌂𑌸𑌸𑍍𑌤𑍇 𑌅𑌪𑌕𑍍𑌷𑌾𑌃"

"*எவர் ஞானமுள்ளவரோ, அவர் இறகுள்ளவர்; எவர் ஞானமில்லாதவரோ, அவர் இறகில்லாதவர்*"

*என்னும் ப்ராஹ்மணத்தை உணர்க.* தங்கஇலையுள்ள - *மேலான அழகுபொருந்திய, விவேகம் வைராக்யம் முதலியவற்றை யுடைய என்றபடி.* அச்வத்தத்தை - *நாளைக்கு நில்லாததை, நம்பத்தகாததை, சரீரத்தை என்றவாறு.* ஸுகப்படி பறந்திடுகிறார்கள் - *முக்தர்களாகிறார்கள் என்றவாறு.*

*ஜீவர்கள் எவனைப்பற்றிய ஞானத்தை யடைந்தவராய்ப் பறந்திடுகிறார்களோ, அந்த பகவானை யோகிகள் பார்க்கிறார்கள்.* (௯)

௧௦.

*இனி, யோகத்தைக் காட்டுகிறார்:*

ப்ராணன் அபானனை விழுங்குகின்றது; சந்திரன் ப்ராணனை விழுங்குகின்றது; சூரியன் சந்திரனை விழுங்குகின்றது; பரம்பொருள் சூரியனை விழுங்குகின்றது.

யோகிகள் அந்த என்றுமுள்ள பகவானைக் காண்கிறார்கள்.

"சந்திரன்," "சூரியன்" *என்னும் சொற்கள் - மனத்தையும் புத்தியையும் குறிக்கின்றன; இவற்றிற்குச் சந்திரனும் சூரியனும் முறையே அதிதைவமாதலின் என்க. ஆகவே,* சந்திரன் - *மனம்;* சூரியன் - *புத்தி.*

*அபானனை ப்ராணனினுள்ளும், ப்ராணனை மனத்தினுள்ளும், மனத்தை புத்தியினுள்ளும், புத்தியைப் பரமாத்மாவினுள்ளும்* ஒடுக்க,—

கக.

𑌏𑌕𑌂 𑌪𑌾𑌦𑌂 𑌨𑍋𑌤𑍍𑌕𑍍𑌷𑌿𑌪𑌤𑌿 𑌸𑌲𑌿𑌲𑌾𑌦𑍍𑌧𑌂𑌸 𑌉𑌚𑍍𑌚𑌰𑌨𑍍 ।
𑌤𑌂 𑌚𑍇𑌤𑍍𑌸𑌤𑌤𑌮𑍁𑌤𑍍𑌕𑍍𑌷𑌿𑌪𑍇𑌤𑍍 𑌨 𑌮𑍃𑌤𑍍𑌯𑍁𑌰𑍍𑌨𑌾𑌮𑍃𑌤𑌂 𑌭𑌵𑍇𑌤𑍍 ॥
𑌯𑍋𑌗𑌿𑌨𑌸𑍍𑌤𑌂 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍 ॥

---

*அங்ஙனம் இரண்டாவதில்லதாய் ஆத்மாவான ப்ரஹ்மமாய் ஆநந்த அறிவான தன்ஸ்வரூபமாய் நிற்ற லாகின்றது என்பது பொருள்.*

*எந்தப் பரமாத்மாவினிடத்து புத்தியும் ஒடுங்குகின்றதோ, அந்த பகவானை யோகிகள் பார்க்கிறார்கள்.* (கo)

கக.

*இனி, பரமார்த்தநிலையையும் பரமார்த்தமல்லாதநிலையையும் காட்டுகிறார் :*

ஹம்ஸமானது ஜலத்திற்கு மேலே சஞ்சரிக்கின்றதாய், ஒருகாலைக் காட்டுகிறதில்லை ; (எங்கும்)வியாபிக்கப்பட்ட அதனைக் காட்டுமாயின்,— ஸம்ஸார மில்லை, மோக்ஷ மில்லை.

அந்த என்றுமுள்ள பகவானை யோகிகள் காண்கிறார்கள்.

*அவித்யையையும் அதனது கார்யத்தையும் கொல்வது எதுவோ அது* **ஹம்ஸம்** *எனப்படும். ஆகவே,* **ஹம்ஸம்** *- பரமாத்மா.* **ஜலத்திற்கு** *- ஜலம்போல் துலக்கமான துரீயம் என்னும் நான்காவது காலுக்கு.* **மேலே** *- நனவு கனவு உறக்கம் என்னும் மூன்று கால்களாக.* **ஒரு காலை** *- நான்காவதாகிய பரமார்த்தநிலையை.*

*பந்தம மோக்ஷம் முதலிய வியவகாரமெல்லாம் அத்வைதநிலையிலே இல்லை என்பதாம். அப்படியே, கூறப்பட்டுளது :*

“ 𑌮𑌾𑌯𑌾𑌮𑌾𑌤𑍍𑌰𑌮𑌿𑌦𑌂 𑌦𑍍𑌵𑍈𑌤𑌮𑌦𑍍𑌵𑍈𑌤𑌂 𑌪𑌰𑌮𑌾𑌰𑍍𑌥𑌤𑌃॥”

“ ....................𑌜𑍍𑌞𑌾𑌤𑍇 𑌦𑍍𑌵𑍈𑌤𑌂 𑌨 𑌵𑌿𑌦𑍍𑌯𑌤𑍇 ॥ ”

*“ இந்த த்வைதமானது வெறும் மாயையாம் ; வாஸ்வத்திலே அத்வைதமாம் ” (கௌட - க - கஎ)*

*“ ................(பரமார்த்த தத்துவத்தை) அறிந்தவிடத்து த்வைத மில்லை ” (ஷை - கஅ)*

கஉ.

अङ्गुष्ठमात्रः पुरुषोऽन्तरात्मा
लिङ्गस्य योगेन स याति नित्यम् ।
तमीशमीड्यं जगदादिभूतं
पश्यन्ति मूढा न विराजमानम् ॥
योगिनस्तं प्रपश्यन्ति भगवन्तं सनातनम् ॥

---

*எவன் வாஸ்தவத்திலே அத்வைதமா யிருக்கின்றுனே, அந்த பகவானை யோகிகள் பார்க்கிறுர்கள்.* (கக)

கஉ.

*உபாதியினுல் ப்ரஹ்மமே ஜீவனுயிருத்தலைக் காட்டுகிறுர் :*

அந்தப் புருஷன் உள்ளேயுள்ள ஆத்மாவாய் பெருவிரல்அளவின ஞய் ஸூக்ஷ்மசரீரத்தின் ஸம்பந்தத்தாலே எப்போழுதும் (இம்மை மறு மைகளை)அடைகின்றுன். துதிக்கத்தக்கோனுய் (யாவற்றையும்) ஒழுங் காக அமைக்கும் முதல்வனுய் விளங்குகின்ற அந்த ஈச்வரனை மூடர்கள் காண்கிறு ரில்லை.

அந்த என்றுமுள்ள பகவானை யோகிகள் காண்கிறுர்கள்.

அந்தப் புருஷன் - *தனி அறிவான உண்மையாய் எங்கும்நிறைந்த ப்ரஹ்மம். மனிதனுடைய பெருவிரலின் அளவு எவ்வளவோ, அவ்வ ளவிற்று அவனது ஹிருதயம். இதனது ஒட்டையி லுள்ளது அகக்கர ணம். இதுவோ ப்ரஹ்மத்திற்கு உபாதியாம். ஆகவே, அவ்வுபாதி யினை நோக்கி* “பெருவிரல்அளவினனுய்” *என்றுர். இதற்குஇணங்க,*

> “ अङ्गुष्ठमात्रं पुरुषं निश्चकर्ष यमो बलात् ॥ ”
>
> “*யமன், பெருவிரல்அளவினனை புருஷனை வலிய வெளியே இழுத்தான்*” *(மகாபா - அரண்யப - உகூசு - கஎ)*

*என ஸ்மிருதி அருளிச்செய்ததையும் நோக்குக.*

*எவனைக் காணுதவர்கள் பிறந்து இறந்து உழல்கிறுர்களோ, அந்த பகவானை யோகிகள் பார்க்கிறுர்கள்.* (கஉ)

கரு.

𑌗𑍂𑌹𑌂𑌤𑌿 𑌸𑌰𑍍𑌪𑌾 𑌇𑌵 𑌗𑌹𑍍𑌵𑌰𑍇𑌷𑍁
𑌕𑍍𑌷𑌯𑌂 𑌨𑍀𑌤𑍍𑌵𑌾 𑌸𑍍𑌵𑍇𑌨 𑌵𑍃𑌤𑍍𑌤𑍇𑌨 𑌮𑌰𑍍𑌤𑍍𑌯𑌾𑌨𑍍 ।
𑌤𑍇 𑌵𑌿𑌮𑍁𑌹𑍍𑌯𑌂𑌤𑌿 𑌜𑌨𑌾 𑌵𑌿𑌮𑍂𑌢𑌾𑌃
𑌤𑍈𑌰𑍍𑌦𑌤𑍍𑌤𑌾 𑌭𑍋𑌗𑌾 𑌮𑍋𑌹𑌯𑌨𑍍𑌤𑍇 𑌭𑌵𑌾𑌯 ॥
𑌯𑍋𑌗𑌿𑌨𑌸𑍍𑌤𑌂 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌂𑌤𑌿 𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍 ॥

---

கரு.

*இனி, இந்திரியங்களும் விஷயங்களும் தீங்கிற்குக் காரணமாதலைக் காட்டுகிறார் :*

(இந்திரியங்கள்) தமத செய்கையினலே ப்ராணிகளைக் கெடும்படி செய்து, பொந்துக்களுள்ளே பாம்புகள்போலப் பதுங்கிக்கொள்ளுகின்றன. அந்த நன்கு மயங்கிய ஜனங்கள் மிகப் பெரிதும் மயங்குகிறார்கள். அவற்றால் கொடுக்கப்பட்ட போகங்கள் (ப்ராணிகளை)மயக்குகின்றன, ஸம்ஸாரத்திற்கு ஆகின்றன.

அந்த என்றுமுள்ள பகவானை யோகிகள் காண்கிறார்கள்.

*புற்றுக்களுள்ளே கிடக்கும் பாம்புகள் அவற்றினின்றும் வெளி வந்து ப்ராணிகட்கு விஷத்தைக் கொடுத்து அவர்களைக் கெடும்படிசெய்து, திரும்ப அப் புற்றுக்களினுள்ளேயே ஓடிப்போய்த் தம்மை ஒளித்துக்கொள்ளுமாறுபோல,— செவிமுதலாகிய புற்றுக்களுள்ளே கிடக்கும் இந்திரியங்களாகிய ஸர்ப்பங்கள் அவற்றினின்றும் வெளிவந்து ப்ராணிகட்கு விஷயங்களாகிய விஷத்தைக் கொடுத்து அவர்களைக் கெடும்படிசெய்து, திரும்ப அச் செவிமுதலாகிய புற்றுக்களுள்ளேயே ஓடிப்போய்த் தம்மை ஒளித்துக்கொள்கின்றன. பகுத்தறிவில்லாதவர்கள் விஷயங்களாகிய விஷத்தால் மிகத் தாக்கப்படுகிறார்கள், இந்திரிய விஷயங்களைத்தவிர பிறவற்றை மதிக்கிறார்களில்லை என்பதாம். அவற்றால் - இந்திரியங்களாகிய பாம்புகளால்* போகங்கள் - *விஷம்போன்ற விஷயங்கள்.* ‘ஸம்ஸாரத்திற்கு ஆகின்றன’ *என்பதற்கு - ‘விஷயங்களால் மயங்குதல் எதுவோ அது, பிறப்பு பிணி மூப்பு முதலியவற்றை விளைக்கின்றன’ என்பது பொருள்.*

*ஜனங்கள் எவனை அறியாமையினலே விஷயவிஷத்தால் குருடராகி மயங்குகிறார்களோ, அந்த பகவானை யோகிகள் காண்கிறார்கள்.* (கரு)

கச.

அஸாயநா வாऽபி ஸஸாயநா வா

ஸமாநமேதத்ப்ரஸ்ருதே ஸமாநஷேஷு ।

ஸமாநமேதத்த்ரிதயஸ்ய தாஸ்ய

யத்ராஸ்ய மத்ய உத்ஸம் ஸமாவர்: ॥

யோகிநஸ்ஸம் ப்ரபஸ்யந்தி ஹவஸம் ஸநாதநம் ॥

கரு.

உபே லோகௌ வித்யயா ப்ராப்ய யாதி

ததா ஹுதம் சாஹுதமக்நிஹோத்ரம் ।

---

கச.

*இனி, ஸாதநமுடையோனுக்கு மோக்ஷத்தை அருளிச்செய்கிறார் :*

மனிதரில், (சிலர்) ஸாதநமில்லாதவ ராயினும் ஆகுக ; (சிலர்) ஸாத நமுடையவ ராயினும் ஆகுக. இது (அவ்விருவரிடத்தும்) ஒன்றாகக் காணப்படுகின்றது. இது மோக்ஷத்திற்கும் மற்றையதற்கும் ஒன்றாக உளது. (ஸாதநத்தை)யுடையோர் அங்கு தேனின் மூலத்தை யடைந் தார்கள்.

அந்த என்றுமுள்ள பகவானை யோகிகள் காண்கிறார்கள்.

**ஸாதநம்** - *சமம் தமம் முதலியன.* **இது** - *ஆத்மஸ்வரூபம்.* **ஒன்றாக** - *ஸமமாக, வேறுபாடில்லதாக.* **மற்றையதற்கும்** - *ஸம்ஸாரத்திற்கும்.* **அங்கு** - *பரம்பொருளினுடைய பரமபதத்திலே.* **தேனின் மூலத்தை யடைந்தார்கள்** - *நிறைந்தஆநந்தமான ப்ரஹ்மத்தை யடைகிறார்கள் என்றபடி.*

*ஸாதநமுடையோர் எந்த நிறைந்த ஆநந்தத்தை யடைகிறார்களோ, அந்த பகவானை யோகிகள் காண்கிறார்கள்.* (கச)

கரு.

*இவ்வாறு ப்ரஹ்மத்தை யடைந்தவனிலே, எல்லாப் பயன்களை யும் அடைந்து ஈடேறிநிற்றலை அருளிச்செய்கிறார் :*

(ஞானியானவன்) இரண்டு உலகங்களையும் ஞானத்தினால் அழிந்து செல்கிறான். அங்ஙனம் செய்யப்படாத அக்நிஹோத்ரம் (அவனுக்குச்)

28

ஊ தெ ஙுாஹ்ம ஞவாூதாஊாஉயீத
ஷஜ்ஞாநம் ஸ்ராநாஊ யீரா ஞஹதெ ||
யொகிநஷ்ம் ஷவஸ்ஞி ஹமவஞம் ஸநாதநம் ||

---

செய்யப்பட்டதே ஆகின்றது. ப்ரஹ்மத்தைப்பற்றிய (ஞானம்) உனக்குச் சிறுமையைச் செய்யமாட்டாது. ப்ரஜ்ஞாநம்[அறிவு]என்பது (அவனது) பெய ராகும். தீரர்கள் (இதனை)ப் பெறுகிறார்கள்.

அந்த என்றுமுள்ள பகவானை யோகிகள் காண்கிறார்கள்.

**இரண்டு உலகங்களையும்** - *ஆத்மஉலகையும், அநாத்மஉலகையும்.* **ஞானத்தினால்** - *'நானே இந்த எல்லாமா யிருக்கிறேன்'என்னும் ஸர்வாத்மவடிவிற்றான வ்ருத்தியினால்.* **சேல்கிறான்** - *ப்ராரப்தவினையினாலே உடம்புதாங்கப்பெற்றவனாய்ச் சஞ்சரிக்கின்றான். கர்மத்தின் பயனெல்லாம் ஞானத்திலே அடங்குகின்றன என்பார்,* "**செய்யப்படாத அக்நிஹோத்ரம் செய்யப்பட்டதே ஆகின்றது**"*என்றார். அவ்வண்ணமே, பகவான்*

> *"யாவாநயூ உஊவாநெ ஸவூதஃஸம்ஷுதொஊகெ | தாவாந் ஸவெஷு வெஊஷு ஙுாஹ்ணஸ்ய விஜாநதஃ ||"*
>
> *" (கிணறுமுதலிய)நீர்நிலையில் எவ்வளவு உபயோகம் உள்ளதோ, அவ்வளவு(உபயோகமும்) எங்கும்பெருகிய நீர்ப்பெருக்கில் உள்ளது. (அதுபோல,) ஸகலவேதங்களிலும் (எவ்வளவு ப்ரயோஜனம் உள்ளதோ, அவ்வளவு ப்ரயோஜனமும்) ஞானியான ப்ராஹ்மணனுக்கு (ப்ரஹ்மாநந்தத்தில் உள்ளது.)"— (வே - கீ - உ - சசு)*
>
> *"ஸவூம் கஊூவிலம் வாயூ ஜ்ஞாநெ வரிஸஊாவ்யதெ ||"*
>
> *"பார்த்த! ஸகலகர்மமும் ஞானத்திலே மிச்சமில்லாது முடியப்பெறுகின்றன"— (வே - கீ - ச - நரு)*

*என அருளிச்செய்ததை அறிக.* **சிறுமையை** - *சாருந்தன்மையை. கர்மம் ஸம்ஸாரத்தைத் தருவதுபோல், ஞானம் அதனைத் தராது; மற்று, அழியா ஆநந்தத்தையே தருவ தென்பதாம். இனி,*

**கசு.**

**ஊவம்ஶுவெ் உஹாநாத்மா ஷாவகம் வுூரூஷெ் ரிஶநு ।**
**யொ வெ தம் வுூரூஷம் வெத தவெஹாத்மா நரிஷ்யெத ॥**
**யொ ரிநஷம் வுவஸ்ஷி ஹஜவஞம் ஸநாதநஂ ॥**

---

"ப்ரஜ்ஞாநம் ப்ரஹ்ம"

"*ப்ரஜ்ஞாநம்[அறிவு] ப்ரஹ்மம்*"— (வே - ஐதரே - உப - ரு - க - ச)

எனவும்,

"ப்ரஹ்ம வெத ப்ரஹ்மெவ ஹவதி"

"*ப்ரஹ்மத்தை அறிகிறுன், ப்ரஹ்மமே ஆகிறுன்*"— (மு - ரு - உ - கூ)

எனவும் சுருதி கூறுகின்றமையால், ஆத்மாவை ப்ரஹ்மமாகக் கண்டு தேறியவன் '*ப்ரஜ்ஞாநம்[அறிவு]*'என்னும் பெயரைப் பெறுகிறுன். (**இதனை**) - *ப்ரஜ்ஞாநம் என்னும் பெயரை.*

எவனுக்கு ப்ரஜ்ஞாநம் என்னும் பெயர் உளதோ, அந்த பகவானை யோகிகள் பார்க்கிறுர்கள். (கரு)

**கசு.**

*இன்னும்,*

**இப்படிப்பட்டவன் ஆத்மாவான மஹான் (ஆகிறுன்). எந்தப் புருஷன் அக்நியை விழுங்குகிறவனுய் அந்தப் பூர்ணத்தை அறிகின்றுனே, அவனது ஆத்மா இங்குக் கேடுக்கப்படுகிற தில்லை.**

**யோகிகள் அந்த என்றுமுள்ள பகவானைக் காண்கிறுர்கள்.**

**இப்படிப்பட்டவன்** - *ப்ரஜ்ஞாநமாயிருப்பவன்.* **மஹான்** - *ப்ரஹ்மம்.* **அக்நியை** *என்றது, ஆகாயம் நிலம் நீர் முதலியவற்றிற்கும் அவற்றுலாகிய ப்ரபஞ்சத்திற்கும் உபலக்ஷணம்.* **அக்நியை விழுங்குகிறவனுய்** - *கார்யமாகிய ஜகத்தை, காரணமாகிய தன்ஆத்மாவான ப்ரஹ்மஸ்வரூபத்தினுள் அடக்குகிறவனுய் என்றவாறு.* **பூர்ணத்தை** - *எங்கும்நிறைந்த ப்ரஹ்மத்தை.* **இங்கு** - *இவ்வுடம்பொடுநிற்கும்பொழுதேயே.* **கேடுக்கப்படுகிற தில்லை** - *துன்பம் தொலைய, ப்ரஹ்மாநந்தமாய் விளங்குகின்றது என்றபடி.*

கஎ.

𑌤𑌸𑍍𑌮𑌾𑌚𑍍 𑌸𑌦𑌾 𑌸𑌤𑍍𑌯𑌰𑌤𑌃 𑌸𑍍𑌯𑌾𑌚𑍍
𑌨 𑌹𑍍𑌯𑌤𑍍𑌰𑌾𑌨𑍃𑌤𑌂 𑌆𑌤𑌃 ।
𑌸𑌤𑍍𑌯𑌾𑌨𑍃𑌤𑍇 𑌸𑌤𑍍𑌯𑌸𑌮𑌾𑌨𑌬𑌨𑍍𑌧𑌿𑌨𑍀
𑌸𑌤𑌶𑍍𑌚 𑌯𑍋𑌨𑌿𑌰𑌸𑌤𑌶𑍍𑌚𑍈𑌕𑌏𑌵 ॥
𑌯𑍋𑌗𑌿𑌨𑌸𑍍𑌤𑌂 𑌪𑍍𑌰𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿 𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌂 𑌸𑌨𑌾𑌤𑌨𑌮𑍍 ॥

கஅ.

𑌅𑌙𑍍𑌗𑍁𑌷𑍍𑌠𑌮𑌾𑌤𑍍𑌰𑌃 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌮𑌹𑌾𑌤𑍍𑌮𑌾
𑌨 𑌦𑍃𑌶𑍍𑌯𑌤𑍇𑌽𑌸𑍌 𑌹𑍃𑌦𑌯𑍇 𑌨𑌿𑌵𑌿𑌷𑍍𑌟𑌃 ।

---

*எவனை யறிந்தவளவிலே கேடுறுவ தில்லையோ, அந்த பகவானை யோகிகள் பார்க்கிறார்கள்.* (கசு)

கஎ.

*அவனை யறிந்தவிடத்தே கேடு இல்லை*

ஆகலின், (ஒருவன்) எப்பொழுதும் உண்மையானவனாய் இருக்க வேண்டும். (அங்ஙனம் அவனுக்கு) ஸம்ஸாரம் இல்லை; (ஆகலின்,) மோக்ஷம் ஏது? [இல்லை.] உண்மையும் பொய்ம்மையும் ஒரேஉண்மையைச் சார்ந்திருக்கின்றன. உண்மைக்கும் பொய்ம்மைக்கும் அடிக்காரணம் ஒன்றேதான்.

யோகிகள் அந்த என்றுமுள்ள பகவானைக் காண்கிறார்கள்.

உண்மையானவனாய் - *ஆநந்தஅறிவான தன்உண்மைஸ்வரூபமாய்.* ஒன்றேதான் - *ப்ரஹ்மமேதான்.*

"𑌸𑌤𑍍𑌯𑌂 𑌚𑌾𑌨𑍃𑌤𑌂 𑌚 𑌸𑌤𑍍𑌯𑌮𑌭𑌵𑌤𑍍 ।"

*"ஸத்யம், ஸத்யமாகவும் பொய்ம்மையாகவும் ஆயிற்று"*—
(தை - உப - உ - சு)

*என்பதற்கு பகவத்பாதர் அருளிச்செய்த பாஷ்யமும், ஸ்ரீசங்கராநந்த யாத்ராதீபிகையும் இங்கு உணரத்தக்கன.*

*எந்தப் பரமார்த்தஸத்யம் எல்லாவற்றிற்கும் மூலகாரணமோ, அந்த பகவானை யோகிகள் பார்க்கிறார்கள்.* (கஎ)

கஅ.

*மற்றும்,*

பெருவிரல்அளவினனாய் உள்ளேயுள்ள ஆத்மாவாய் ஹ்ருதயத்தி

